

வாசகமாம, வாச்சியமாம நடுவாய அந்த
வாசக வாச்சியம கூடந்த மௌனமாகித்
தேசகமாய இருளகமாய் இரண்டுங்காட்டச்
சித்தகமாய வித்தகமாய் சிறிதும பந்த
பாசமுருப்பதியாகிப் பசுவுமாகிப்
பாசநிலையாகி ஒன்றும் பகராதாகி
தாசமிலா வெளியாகி ஒளிதானாகி
நாதாந்த முடிவிற் நடம் நவிற்றுந்தேவே.

—திரு அருட்பா.

பிப்ரவரி, 1985

# ஸப்தகிரி

இதழ் 9 மலா 15

தனிபபிரதி ரூ. 1 வருடச சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முகபபில : நடராஜரின ஆனநதத் திருத்தாண்டவம.
சித்திரம திரு. மா. ஸ்ரீ.

2-வது : திருமலை தெபபோறசவம.

3-வது : ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில்—திருபபதி

பினனடடையில . ஸ்ரீ வேத நாராயண சுவாமி கோயில,
நாகலாபுரம.

*சிறப்பாசிரியர்*
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு
I.A.S.,
செயலாட்சித தலைவா,
தி.தி.தேவஸ்தானம், திருபபதி.

*அச்சிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸதான அசசகம்,
திருப்பதி.

*ஆசிரியர்*
திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.



# உங்களுடன்....

"திடுக்கிட்டு விழுந்து பார்த்தால் ஒரு கோயில், படுக்கை விட்டு எழுந்தால் ஒரு பண்டிகை" என்று இந்தியாவைப் பற்றிக் கூறியது வீரமாமுனிவரோ, ஹுவான் சுவாங்கோ, தாலமி, வெல்லஸ்லியோ அல்ல. பிறர் உழைப்பில் உண்டு மகிழ்ந்து, அம்மகிழ்ச்சி பறிக்கப்பட்ட நிலையில் நம்மவர் சிலரின் புலம்பல்தான் அது. கோயில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று கூறும் அளவிற்கு நாட்டில் பல கோயில்களைக் கட்டுவித்த, 'நீறில்லா நெற்றி பாழ்' என்று கூறிச் சில குறியீடுகளை ஏற்படுத்தி நம்மிடையே சமயத்தையும், சமயம் சம்பந்தப்பட்ட விழாக்களையும் அமைத்துத்தந்த நம் முன்னோர்கள் வேறு வேலையற்றுத்தான் இருந்தார்களா! இது உண்மையானால் இன்றைய உலக வரைபடத்தில் நமது இந்தியா இடம் பெற்றிருந்திருக்காது. என்று தோன்றியது என்று ஊகிக்க முடியாத வகையில் காலத்தால் மூத்த சமய உணர்வை நமது பாரத மண் கொண்டிருப்பதால்தான். இனம், இடம், மதம், நிறம், உருவம் போன்ற பலவேறு நிலைகளில் பலவிதமாக மாறுபாடு கொண்டிருக்கும் இன்றைய பாரதம் பலவிதமான பிரச்சனைகள் தன்னைச் சூழ்ந்திருந்தாலும் தனக்கென ஒரு பெருமையினை இப்பாரினில் நிலை நிறுத்திக் கொண்டு வருகின்றது.

விஞ்ஞானத்தின் எல்லையைத் தொட்டு இன்று உலக அரங்கில் முன்னேறிய நாடுகளில் ஒன்றாகக் கருதப்படும் அமெரிக்காவும் மெய்ஞ்ஞானத்தின் பக்கம் திரும்பும் அதிசயமென்ன! உழைப்பின் உயர்வை கண்ட அவர்கள், அதனை அனுபவிக்கப் போதுமான ஆத்ம பலம் குன்றியிருப்பதால்தான் அவர்களுக்கு ஆன்மீகத் தாகம் ஏற்பட்டிருக்கிறது. இதே அமெரிக்காவினால் ஒருபோது சுடுகாடு ஆக்கப்பட்ட ஒருசிறிய நாடான ஜப்பான் அந்த அமெரிக்காவே அதிசயிக்கும் வகையில் விஞ்ஞான முன்னேற்றங்களைச் செய்துள்ளது என்றால், அதற்கான காரணம் அங்கு உழைப்பும், ஆன்மீகமும் சங்கமித்திருப்பதால்தான். இந்த உண்மையை நாம் உணர்ந்தோமே தவிர, அதனைச் செயல்படுத்தவில்லை ஏன்? வேற்றுமையில் ஒற்றுமை காண வேண்டிய நாம், ஒற்றுமையில் வேற்றுமை பாராட்டத் துடிக்கின்றோம். 'எம்மதமும் சம்மதமே' எனும் உயர் உண்மையில் தோன்றிய நமது சமயங்களைக் குறுகிய நோக்கத்துடன் 'தனது சமயமே பெரிது' என்ற கண்ணோட்டத்தில் அணுகி, சமயப் பூசல்களை எழுப்பிட காரணமாக இருப்பவர்களை என்னென்று சொல்வது? "தனது சமயம் போன்றதே பிறர் சமயமும்" என்ற உண்மையை அவர்கள் அறியாதவர்களா என்ன? தூங்குபவனை எழுப்பிடலாம். அது போன்று பாவனை செய்பவனை எழுப்புவது கடினம். ஆகவே நாம் நமது தேர்ந்த அறிவினால், சமயக் காழ்ப்பின்றி எல்லா சமயங்களையும், அவற்றின் தத்துவக் கருத்துக்களையும் அறிந்திட்டால், அதனுடன் நமது உழைப்பையும் சேர்த்திட்டால் விரைவில் நாம் ஒரு ராம ராஜ்யத்தை நம்மிடையே காண்போம்.

வீட்டிலுள்ள ஒரு குழந்தைக்கு, வீட்டிலுள்ள மற்றவர்களில் ஒருவர் அணிகலன் பூட்டியும், மற்றொருவர் புத்தாடை உடுத்தியும், பிறிதொருவர் வண்ண மலர் சூட்டியும் பல வகையாக அக்குழந்தையினைக் கொஞ்சுவர். இவையாவும், அக்குழந்தையின்மீது அவர்கள் காட்டிடும் அன்பின் வெளிப்பாடேயாம். இது போன்றுதான் ஒரு தெய்வத்திற்கு பல நாமங்கள் இட்டு, பல உருவங்கள் சமைத்து, பல குறியீடுகள் அளித்து தங்கள் பக்தியினைத் தெரிவித்துக் கொண்டனர் நமது சமயச் சான்றோர்கள். பக்தி சிறக்க, ஒரு வழிபாட்டு முறையினைப் பலர் தொடர, சமயப் பிரிவுகள் ஏற்பட்டன. பிரிவுகள் பலவாயினும் மக்களின் மனதில் சமய உணர்வுதான் மேலோங்கி விளங்கியது. ஆனால் இடையில் சில சுயநலவாதிகளின் குறுக்கீட்டால் சமயக் காழ்ப்புணர்ச்சி மக்களிடையே தூவப்பட்டது. அறிந்தவர்கள் தெளிந்தார்கள், அறியாதவர்கள் குழம்பினார்கள், பிறரையும் குழப்பினார்கள். இதுதான் இன்று நடைபெற்று வருகின்றது. இதற்கான விடிவு, தனது சமயத்தைப் பற்றி மட்டுமன்றி, பிற சமயங்களின் தத்துவப் பெருமைகளையும் இந்தியர்கள் அறியும் போதுதான் ஏற்படும்.

இவ்வகையில், வரும் சிவராத்திரி அன்று சிவனாரின் பெருமையினையும், சைவ சமயத்தின் தத்துவப் பெருமையினையும் சிறிதே சிந்திப்போம். "தாரித்ரிய துக்க தஹனாய நமசிவாய" என்று வசிஷ்டர் கூறியபடி, பஞ்சாட்சர நாயகனை கைலயங்கிரிநாதனை நாயகனாகப் பெற்ற சைவ சமயம் பல சிறப்புக்களைப் பெற்றுள்ளது. அன்பினையும் அஹிம்சையினையும் அடிப்படைக் கூறுகளாக சைவ சமயம் பெற்று விளங்குகின்றது. காக்கும் பரமனாக சாரங்கன் இருக்க, அழிக்கும் தெய்வமாக சங்கரன் விளங்குகின்றான். இங்கு அழிவு என்பது வாழ்க்கை எனும் பெருங்கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் மனிதனைக் கரை சேர உதவும் ஒரு மரக்கலம் போன்று, அவனுக்கு முக்தி அளிக்கும் ஓர் உபாய வழியாகும். இங்கு சாதகனுக்கு ஆன்ம சுகம் ஏற்படுகின்றது. பரமாத்மா ஜீவாத்மாவைத் தன்னுடன் இணைத்துக் கொண்டு சுத்த ஆனந்தத்தையும் மங்கலத்தையும் தந்தருளும் நோக்குடையது சைவ நெறியாகும். 'நவ வ்யூஹ ஸ்வரூபியான' வேதம் போற்றும் ருத்ரனான சிவபெருமான் அஷ்டமூர்த்தி தத்துவமாகவும் விளங்குகிறார். மந்திர யந்திர தந்திர ரூபனாய், நீலகண்டனாய், உமையொரு பாகனாய், எங்கும் நிறைந்தவனாய், சகல லோக குருவாய், பரிபூரண சச்சிதானந்த ரூபியாய் இருக்கும் அம்பிகைபாகன், நிலையாமையினை நமக்கு உணர்த்தச் சுடுகாட்டினைத் தன் இருப்பிடமாகக் கொண்டு, காமக் குரோதங்களை ஒழித்த ஒருவன் யோகியாகலாம் என்பதைக் கூறும் வகையில் புலித்தோலை ஆடையாகக் கொண்டு, ஐம்புலன்களை அடக்குவதின் அவசியத்தை அறிவிக்கும் முகத்தான் பாம்பு, மழு, மான், திரிசூலம் போன்றவற்றைத் தன் உடம்பில் ஏற்றிக் கொண்டு ஆனந்தத்தாண்டவம் புரியும் அவ்வாடலரசனை வரும் சிவராத்திரி அன்று, அவன் பெருமை பேசி, அவனடி புகுந்து அனைத்தும் பெறுவோமாக!

# செய்திச் சுருக்கம்

## இலவச கண் அறுவை சிகிச்சை முகாம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆதரவில், ஹைதராபாத் சரோஜினி தேவி கண் மருத்துவமனை தலைவர் டாக்டர் பி சிவா ரெட்டி தலைமையில் 24-வது இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் திருப்பதியில் ஸ்ரீகோதண்டராம தர்ம சத்திரத்தில் 7—1—85 அன்று திறந்து வைக்கப் பட்டது. இம்முகாமினை ஆந்திர மாநில ஆளுநர் திரு. எஸ. டி. சர்மா அவர்கள் திறந்து வைக்க, விழாவிற்கு ஆந்திர மாநில கல்வி அமைச்சர் முத்து கிருஷ்ண நாயுடு அவர்கள் தலைமை வகித்தார். அவாதம் தலைமை உரையில், விரைவில திருப்பதியில் கண மருத்துவமனை ஒன்று திறக்கப்படும் என்று கூறினா. ஐந்து நாட்கள் நடைபெற்ற இம்முகாமின் போது, 2000 கண நோயாளிகள் பரிசோதிக்கப்பட்டனர். அறுவை சிகிச்சை செய்து கொணட நோயாளிகளுக்கு இலவசமாக தங்கு வசதியும் உணவும் வழங்கப்பட்டதுமனறி, அவர்களுக்கு மூக்குக் கணணுடிகளும் அளிக்கப்பட்டன. டாக்டர் பி. ரங்காரெட்டி, டாக்டர் ஏ. வி. நரசிம்மாராவ் ஆகியோரின் தொண்டு இம்முகாமின் போது பெரிதும் பங் கேற்றது.

## அன்பளிப்பு

ரூ. 80,000 செலவில் தயாரிககப்பட்ட ஸ்ரீரஙகநாத சுவாமி மற்றும் ஸ்ரீதேவி பூதேவி ஆகியோரின் திருவுருவ விக்ரகங்கள், பெங்களூரில் உள்ள ஸ்ரீ ரங்கநாதசுவாமி கோவிலுக்கு தி. தி. தேவஸதானம் இலவசமாக வழங்கியது. 'இநது தர்ம பிரசாரம்' எனும் திட்டத்தின் கீழ் இப்பணியினை தேவஸதானம் மேற்கொண்டது.

## திருமலையில்

ஒவ்வொரு ஆண்டின் முதல் நாள் அன்று நாட்டின் பல்வேறுபகுதிகளிலிருந்து ஆயிரககணக்கான பக்தர்கள் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசிப்பர். இவ்வகையில் இவ்வாணடு முதல்நாளன்று திருமலைக்கு சுமார் 70,000 பக்தர்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர். அன்றுதான், திருமலையில் புதிதாகக் கட்டபபட்ட 'க்யூ' கட்டிடத் தொகுதியின வழியாக யாததிரிகள தர்ம தரிசனத்திற்கு அனுமதிக்கப்பட்டனர். இக்கட்டிடத் தொகுதியில் அமரும்யாத்திரிகர்களின்களைப்பினைப் போக்கும் வகையில் சதஸ் அரங்கில் நடைபெறும் சமய நிகழ்ச்சிகளை ஒளி பரப்பும் வகையில், 17 தொலைக் காட்சி பெட்டிகள் வைக்கப்பட்டுள்ளன. 1—1—85 அன்று திருமலைக்குக் கிடைத்த வருமானம் ரூ. 16.10 இலட்சமாகும். இதில் உணடி மூலம வசூலானது ரூ 8.51 இலட்சமாகும்.

## இதிஹாசப் போட்டி விழா :

தி. தி. தேவஸ்தானததின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் 29-1-84 அன்று நடைபெற்ற 5வது இதிஹாஸப் போட்டியில் வெற்றிப் பெற்றமாணவமாணவிகளுக்குப்பரிசுகள் 11-1-85 அன்று வழங்கப்பட்டன. சுமார் 415 பளளிகளைச் சார்ந்த, 15,888 மாணவ மாணவிகள் பங்கேற்றதில் 10,618 மாணவ மாணவிகள் வெற்றி பெற்றனர். மாநில அளவில் குமாரி. கே. பிரபாவதி எனும மாணவி முதலாவதாகத் தேர்ச்சி பெற்றாள்.

## பாராட்டு விழா :

திருப்பதியில தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 13-1-85 அன்று, அம்மன்றத்தில் பணி புரிந்து வரும் திரு. மேடசானி மோகன் அவர்களின் 'தசகுனித அஷ்டாவதானம' எனும் சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்றதைத் தொடர்ந்து, அன்னாருக்கு ஆந்திர மாநில கல்வி அமைச்சா திரு. முத்து கிருஷ்ண நாயுடு அவர்கள் 'அவதானி சகரவர்த்தி' எனும் பட்டம் அளித்து, பொனனாடை போர்த்திக கௌரவித்தார். இது சம்பந்தப்பட்டு ஏற்பாடு செய்யப்பட்ட விழாவினை தி.தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்கள் துவக்கி வைக்க, விழாவிற்குத் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் ஜி. என். ரெட்டி அவர்கள் தலைமை வகித்தார். இவ்விழாவில், 'தெலுங்கு கங்கா' திட்டத்தின் சிறப்பு அலுவலர் திரு. கே. வெங்கட சிவய்யா அவர்களும் பங்கேற்றார்.

## திருப்பாவை விழா :

13-1-85 அன்று திருப்பதி பரகால மடத்தில் மாலை 6 மணி அளவில் திருப்பாவை உபந்யாஸ சாற்றுமுறை சிறப்பாக நடைபெற்றது. மார்கழி மாதத்தின் 30 நாட்களிலும் திருப்பாவை சொற்பொழிவுகள் திரு. பி. பி. நரசிம்ம ஐயங்கார், திரு கே. என். ஸ்ரீநிவாச ஐயங்கார் ஆகியோரால் வழங்கப்பட்டன. மேலும் திருவாளர்கள் என். எஸ். ராமானுஜ தாதாசார்யார், நாவல்பாக்கம் வேத தாதாசார்யார், ஸாகூர் வரதாச்சாரியார் போன்ற அறிஞர் பெருமக்களும் இச்சொற்பொழிவுக கூடத்தில் பங்கேற்று உரையாற்றினர், இதுபோது, ஸ்ரீ ஸேவா சுவாமி இயற்றிய 'ஸ்ரீ அஷ்ட லக்ஷ்மி ஸ்தோத்திரம்' எனும் ஒரு புத்தகக் கையேட்டினை திரு. என். எஸ். வி. ராகவன் அவர்கள் கூட்டத்தினர்க்கு இலவசமாக விநியோகித்தார். தினப் பாராயணத்திற்குப் பயன்படும் இக்கையேட்டினை பெற விரும்புவோர்'' என். எஸ். வி ராகவன், 301 நாதமுனி தெரு, திருப்பதி' எனும் முகவரியுடன் 35 பைசா தபால்தலையிட்ட உறையுடன் தொடர்பு கொள்ளவும்.

## வருந்துகிறோம் :

மாதம ஒரு நூல் வீதம் வெளியிட்டு சமய தமிழ் இலக்கிய உலகில் ஒரு புரட்சியினை ஏற்படுத்திக் கொண்டிருந்த சிறந்த ஆஸ்திகவாதியான 'நஜன்' என்றழைக்கப்படும் திரு. நடராஜன் அவாகள 21—1—85 அன்று மரணமடைந்தார் என்பதைக் கேள்வியுற்று நாங்கள் மிகவும் அதிர்ச்சி அடைந்தோம். அவர் வெளியிட்டு வந்த ஒவ்வொரு நூலிலும் அவரது அயராத உழைப்பு, குன்றாத தமிழ் மற்றும் வடமொழிப் புலமை நன்கு புலப்படும். அன்னாரைப் பிரிந்து வாடும் அவருடைய குடும்பத்தார்க்கும், நண்பர்களுக்கும் எங்களுடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

—ஆசிரியர்.

# ★ செய்யாதன செய்யோம் ★



மார்கழி மாதத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது ‘‘मासानां मार्गशीर्षोऽस्मि’’ என்று பகவத்கீதையில் கிருஷ்ண பரமாத்மா சொல்கிறார். தெய்வத்தன்மை வாய்ந்த மாதமிது. ஏனைய மாதங்களிற்காட்டிலும் இம்மாதத்திற்குத் தனிச் சிறப்பு தரும் காரணங்கள் பல உண்டு. ஆண்டாள் திருப்பாவை தோன்றியது இம்மாதத்திலேதான். அழகிய கோபுரத்தின் உச்சியில் பொற்கலசம் பொருத்தியதுபோல் இதனால் இம்மாதம் உத்தமோத்தமமாகப் பிரகாசிக்கிறது. தலைப்பிலுள்ள செய்யுட் பகுதியைச் சிறிது அனுபவிப்போம்.

‘‘வையத்து வாழ்வீர்காள்!’’ என்னும் திருப்பாவை இரண்டாம் பாசுரத்தில் மேற்படி சொற்றொடர் இடம் பெற்றுள்ளது. பாவை நோன்பு நோற்பதற்கான சில நியமங்களை ஆண்டாள் இதில் அருளிச் செய்கிறார்.

‘‘நாமும் நம் பாவைக்குச் செய்யும்
கிரிசைகள் கேளீரோ!’’

என்று தொடங்குகிறார். கிரிசைகள் என்பது, கிரியைகள்=காரியங்கள் என்று பொருள்படும். ய-ச- இவ்விரண்டெழுத்துக்கள் ஒன்றினிடத்தில் மற்றொன்று மாறிமாறி வருவது தமிழ்மொழியின இயல்பு. கைகேசி=கைகேயி, தசரதர்=தயரதர், ஆகாசம்=ஆகாயம் என்பன பல உள. அதுபோல் கிரியை கிரிசை என்பதையும் கொள்ள வேண்டும். செய்யும் கிரிசைகள— என்றது, நோன்பிற்காகச் செய்ய வேண்டிய காரியங்கள் என்னும் பொருளுள்ளதாம். தொடர்ந்து சொல்ல வேண்டியது என்ன? செய்ய வேண்டிய காரியங்கள் தானே? செய்யக்கூடாதவைகளல்லவே? ஆனால் இங்கு அவையும் இடம் பெற்றுள்ளனவே? செய்ய வேண்டியவை – செய்யக்கூடாதவை– ஆகிய இரண்டையும் கேளீரோ என்று தொடக்கத்தில் சொல்லவில்லையே! இது எப்படிப் பொருந்தும்? செய்ய வேண்டிய காரியங்கள் சிலவும் இந்தப் பாசுரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனாலும் செய்யாமல் விட்டுவிட வேண்டிய காரியங்கள்தான் அதிகம். ஒரு விதமாக ஆரம்பித்து மற்றொரு விதமாக முடிக்கப்பட்டுள்ளதே! இதன் தத்துவமென்ன?

நாலாயிர திவ்ய ப்ரபந்தம் முழுதும் வேதங்களின் உட்கருத்தையே விளக்கிக் கூறுபவை. அதனால் ‘‘தமிழ் வேதம்’’ என்றே ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் இதைக் குறிப்பிடுகிறார். வேத வாக்கியங்களின் உண்மையான பொருளை உணர்வதில் கஷ்டம் ஏற்பட்டால், அதே விஷயத்தைக் கூறும் ‘‘தமிழ் வேத’’ வாக்கியத்தைப் பார்க்க வேணும். இது அதைத் தெளிவாக விளக்கிவிடும். தந்தையும் தாயும் குழந்தையின் க்ஷேமத்தில் மாறுபாடற்ற கருத்துள்ளவர்களேயானாலும், குழந்தைக்குத் தாயினிடத்தில்தான் சுதந்திரம் அதிகம். தமிழ் வேதமும் ஸம்ஸ்க்ருத வேதமும் ஒரே கருத்தையே விளக்குகின்றன. ஆயினும், செவிக்கினிய செஞ்சொற்களாலாகிய தமிழ் வேதத்தில் அது மிக மிகத் தெளிவாக—எளிய முறை

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர்
திருப்பதி.

யில் நமக்குப் புலனாகின்றது. ஆண்டாளுடைய கல்வித் தமிழுக்குத் தனிச் சிறப்பு ஒன்றுண்டு. பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளையல்லவா இவள்? வேதங்களைக் கசடறக் கற்று, வேள்விகளையும் அனுஷ்டித்தவர் பெரியாழ்வார். அதனால் ஆண்டாளின் அமுதவாக்கில், கண்ணாடியில் முகம் பார்ப்பதே போல் வேதங்களைக் காண்கிறோம்.

வேதங்களில் இதே போன்ற வாக்கியங்கள் பரவலாகக் காணப்படுகின்றன. அவற்றைப் பொருந்த விடுவதற்காக, பூர்வமீமாம்ஸா ந்யாயங்களும் தோன்றியிருக்கின்றன. இரண்டே காட்டுவோமிங்கு:

1) ப்ரஜாபதிவ்ரதம் (प्रजापतिव्रतम्) என்றொரு "வ்ரதம்" சொல்லப்பட்டுள்ளது ஸ்னாதகனுக்கு. பிரம்மசர்யாச்ரமத்தை முடித்துக்கொண்டு பிறகு க்ருஹஸ்தாச்ரமத்துக்குப் போக வேண்டிய நிலையில் உள்ளவன் "ஸ்னாதகன்" எனப்படுவான். "तस्य व्रतम्" என்று தொடங்குகிறது உபதேசம். "அவன் செய்ய வேண்டிய காரியங்கள்" என்பது இதன் பொருள். "இனிச் சொல்லப்படும்" என்பது தொக்கி நிற்கிறது. இப்படி ஆரம்பித்த இடத்தில் தொடர்ந்து "செய்ய வேண்டிய காரியங்களை"த் தானே கூற வேண்டும்? அப்படியில்லை. மாறாக உளது.

"नेक्षेतोद्यन्त मादित्यं नास्तं यन्तं कदाचन।
नोपसृष्टं न वारिस्थं न मध्यं नभसो गतम्॥"

என்பது அங்குள்ள சுலோகம். இதன் கருத்து:—

"உதயமாகிக்கொண்டிருக்கும் ஆதித்தியனைப் பார்க்கக் கூடாது. அப்படியே அஸ்தமனமாகிக் கொண்டிருக்கும் ஆதித்தியனையும், க்ரஹணத்திலுள்ள சூரியனையும்—ஜலத்தினுள் ப்ரதிபலிக்கும் சூரியனையும் - நடு வானத்தில் உள்ள சூரியனையும் ஒரு போதும் பார்க்கக்கூடாது என்பதாம். இதில் செய்யக்கூடாத காரியங்களும் கூறப்பட்டுள்ளன. ஆனால்? செய்ய வேண்டிய ஒன்றுமில்லையே! "तस्य व्रतम्" (அவன் செய்ய வேண்டியவை) என்று தொடங்கிய விஷயம் இந்த உபதேச வாக்கியத்தில் பொருந்தவில்லையே!

2) தர்சபூர்ண மாஸம் என்பது ஒரு யாகம். அதில் "தாக்ஷயண யஜ்ஞம்" என்பது ஒருவகை. அதைச் சொல்லுமிடத்திலும் இதே போன்ற முரண்பாடு காணப்படுகிறது.

"तस्यैतद् व्रतं नानृतं वदेत् - न मांसमश्नीयात् - न स्त्रिय मुपेयात् - नास्य पल्पूलनं न वासः पल्पूलयेयुः" (தைத்-ஸம்-2-5-5)
என்பது அங்குள்ள வாக்கியம்.

"அவன் செய்ய வேண்டிய காரியம் இனிக் கூறப்படும். பொய் சொல்லக்கூடாது-மாமிசம் தின்னக் கூடாது-ஸ்த்ரீ ஸம்பந்தம் கூடாது. இவனுடைய வஸ்திரத்தை, செயற்கை முறையில் (சவர்க்காரம் போடுவது போன்ற வகையில்) சுத்தம் செய்யக்கூடாது" என்பது இதன் கருத்து. இங்கேயும், செய்ய வேண்டிய காரியங்களைக் கூறப்போவதாகத் தொடங்கி, செய்யக்கூடாதவைகளையே மேற்கொண்டு வேதவாக்கியம் உணர்த்துகின்றது! இது பொருத்தமாக இல்லையே!

இந்த வாக்கியங்களுக்குப் பொருத்தமானவகையில் அர்த்தம் சொல்லியாக வேண்டும். இல்லையேல், இவை பைத்தியக்காரனுடைய உளறலாகி விடும்.

மீமாம்ஸா சாஸ்திரம் இதை அப்படி விட்டு விடுமா? இதற்காகவே ஒரு அதிகரணம் (விசாரம்) மீமாம்ஸ சாஸ்திரத்தில் தோன்றியுள்ளது. அதில் சரியான முடிவும் கூறப்பட்டுள்ளது. மேற்படி வேத வாக்கியம் பிழைத்தது.

இது போன்ற இடங்களில் "செய்யக்கூடாது". "செய்யக்கூடாது" என்றே வாக்கியங்களில் கருத்து தோன்றினாலும், அதை அப்படியே ஏற்பதற்கில்லை. "செய்ய வேண்டும்" என்னும் பொருள் கூறியே திர வேண்டும். ஆனால்? வேத வாக்கியத்தின் குறிக்கோள் மாறவும் கூடாது.

பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில்-நாலாவது அத்யாயம்-1-ம் பாதம்-மூன்றாவது அதிகரணத்தில் இவ்விஷயம் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. "नेक्षेत" (பார்க்கக் கூடாது) என்பதற்கு, 'பார்க்காமல் இருப்பதாக மனத்தில் உறுதி கொள்வது" என்பதே பொருள். இது செய்யக்கூடிய காரியமே. இவ்வழியிலேயே ஏனைய வாக்கியங்களுக்கும் பொருள் கூறி விட்டால் பிரச்னை தீர்ந்து விடுகிறதல்லவா? "செய்யக்கூடாது" என்னும் உபதேசத்தின் குறிக்கோள் என்ன? "செய்யாமல் இருக்க வேண்டும்" என்பது தானே? "செய்யாமல் இருப்பேன்" என்னும் ஸங்கல்பம் ஒருவனுடைய மனதில் இருக்குமானால், அவன் அதை நிச்சயமாகச் செய்யவே மாட்டான். அதனால் வேத வாக்கியத்தின் குறிக்கோள் முழு அளவில் பூர்த்தியாகி விடுகிறது. ஜைமினி மகரிஷி, தனது பூர்வமீமாம்ஸா ஸூத்ரத்தில் இவ்வாறு முடிவு செய்தார். கண்டதேவர் (खण्डदेवः) என்பவர் தனது பிரசித்தி பெற்ற பாட்டதீபிகா (भाट्टदीपिका) என்னும் நூலில் இதே விஷயத்தை விளக்கிக் கூறுவதைக் காண்மின் :

"तस्य व्रतं" इति व्रत शब्देन उपक्रमस्थेन, अनुष्ठेयक्रिया प्रतिपादनात् तदनुरोधेन उपसंहारस्थो निषेधोऽनुष्ठेयामेव क्रियां विधत्ते। अत एव नञीक्षतिभ्यां ईक्षणाभाव संकल्प रूप क्रियैव लक्षणया विधीयते। मानससंकल्पस्य प्रवृत्तिनिवृत्त्यविनाभूतत्वात्" (பாட்டதீபிகை. 4- -3)

என்பன அவரது பொன் மொழிகள். ஒரு காரியத்தைச் செய்வது-அல்லது-செய்யாமலிருப்பது, முதன் முதலில் மனத்தில்தான் "எண்ண"த்தின் வடிவத்தில் துவங்கும். பிறகு தான் அதை வாயினால சொல்வது-அல்லது-செய்வது-என்னும் நிலைமை தொடர்ந்து வரும். ஆதலால், சொல்லுக்கும் செயலுக்கும் ஆதாரமாக-வேர் போல் அமைந்துள்ளது மனம்தான். அதனால் ஒரு காரியத்

தைச் செய்-செய்யாதே என்று பணிப்பதைக் காட்டிலும், "அதைச் செய்தே தீருவேன்" "அதைச் செய்யவே மாட்டேன்" என்று மனத்தில் உறுதியான ஸங்கல்பம் செய்துகொள் என்று உபதேசம் செய்வதில் எவ்வளவு அர்த்த புஷ்டி இருக்கிறது? இதையே "கண்ட தேவர்" மேற்கூறிய வாக்கியங்களில் தெளிவுபடுத்தியிருக்கிறார்:

"मातापितृसहस्रेभ्यो वत्सलतरं शास्त्रं"

என்பது மீமாம்ஸா பாஷ்யகாரரான சபர ஸ்வாமியின் ஈடுபாடு: "ஆயிரம் தாய் தந்தையருக்கொப்பானது வேதம்" என்பது கருத்து. வேதமேதான் ௸ கருத்தை விளக்குகிறது. அதையேதான் ஜைமினி முனிவர் போன்ற சாஸ்திரகாரர்கள் தெளிவாகக் கூறுகின்றனர். அந்த வேதவாக்கியங்களைக் காண்மின்:-

"तस्मात्पुरुषो मनसाभिगच्छति ।
तद्वाचा वदति तत्कर्मणा करोति ।"

(தைத். ஆரண்யகம். 1.)

மேலே கூறப்பட்ட கருத்துக்களே இந்த வேத வாக்கியங்களுக்கும் அமைந்தது.

வேதார்த்த நிர்ணயம் செய்வதற்கு வழிகாட்டியாகவே அமைந்த மீமாம்ஸா நியாயங்கள், ஸம்ஸ்க்ருத வேதமாக இருந்தாலும் தமிழ்வேதமாக இருந்தாலும் வாசியின்றிக்கே உபயோகமாகின்றன. ஆதலால் இந்த மீமாம்ஸா நியாயம் (4-3-1) தமிழ் வேதத்தின் "உபநிஷத்" என விளங்கும் ஆண்டாளின் திருப்பாவையிலும் உபயோகிக்கப்பட்டு அர்த்த நிர்ணயம் செய்வது பொருத்தமே.

இனி ௸ மீமாம்ஸா நியாயத்தை அனுஸரித்து ஆண்டாளின் பாசுரத்தின் கருத்தை உணர்வோம்.

"வையத்து வாழ்வீர்காள்" என்னும் திருப்பாவை இரண்டாம் பாசுரத்தில், செய்ய வேண்டியவை பலவும்-செய்யாமல் தவிர்க்க வேண்டியவை பலவும்-கூறப்படுகின்றன. அவையனைத்திலும் — அதற்காதாரமான மனோ நிலையையே (ஸங்கல்பத்தையே) இந்த வாக்கியங்கள் குறிப்பிடுகின்றன" என்பதுதான் நியாய ஸித்தமான பொருளாம். மானஸமான ஸங்கல்பம், செய்யக்கூடிய காரியமேயாதலால் "செய்யும் கிரிசைகள்" என்னும் தொடக்கத்துடன் முரண்பாடில்லாமல் இணைந்துவிடுகிறது. அந்த மன ஸங்கல்பம்-ப்ரவ்ருத்தி (ஒரு காரியத்தில் இழிதல்) நிவ்ருத்தி (ஒரு காரியத்தைச் செய்யாது விடுதல்) இரண்டுக்கும் இன்றியமையாத அடிப்படையாதலால், விதி-நிஷேதம்-ஆகிய இரண்டையும் தாரளமாகச் சொல்லிய தாகி விடுகிறது: இப்படி மீமாம்ஸா ந்யாயத்தினுடையவும் - ஸமானமான வேதவாக்கியங்களினுடையவும் துணையுடன் ஆண்டாளுடைய பாசுரத்தை அணுகினால், அதில் பொதிந்துள்ள ஆழ்ந்த கருத்து புலனாகின்றது.

இங்கு, வேத வாக்கியங்களிலும் காண முடியாத மற்றொரு விசேஷம் திருப்பாவையில் காண முடிகின்றது. விதி-நிஷேத-ரூபமான வேத வாக்கியங்கள், இந்த ப்ரகரணத்தில் "மனஸ்ஸங்கல்ப"த்தையே குறிப்பிடுவதாக நிர்ணயம் செய்த மீமாம்ஸகர்களுக்கு ஒரு கஷ்டம் முற்பட்டது. நிஷேத ரூபமாகவேதானே இந்த வாக்கியங்கள் அமைந்துள்ளன? அவற்றை விதி ரூபமாக (செய்ய வேண்டிய காரியத்தைக் கூறுவதாக) மாற்றுவதெங்ஙனம்? என்னும் பிரச்னை எழுந்தது. அதற்காக "லக்ஷணை" என்னும் முறையை அவர்கள் இந்த வாக்கியங்களில் ஏற்றனர். ஒரு சொல்லுக்கு நேராக ஏற்படாத பொருளில் அதைப் பயன்படுத்தும் முறையே "லக்ஷணை" என்பதாம். சில சந்தர்பங்களில் ஸகஜமாகவே இம்முறையை நாம் தழுவுகிறோம். "ஊரெல்லாம் கதறியழுதது" என்னும்போது "ஊர்" என்னும் சொல் "லக்ஷணை"யாகும். கதறியழுவது என்பது அறிவுள்ள பிராணிகளின் செயல். ஊர் என்பது வீடுகளும் தோட்டங்களுமான அசேதனமானது. ஜடப் பொருள். அது கதறி அழுமா? ஆனால் அனைவரும் ஸஹஜமாக இப்படிச் சொல்லுவதும்—மற்றவர்கள் அதன் அர்த்தத்தை (க்கஷ்டமில்லாமலே) உணர்ந்து கொள்வதும் அனுபோகத்தில் இருக்கிறதே! இதன் தத்துவமென்ன? "லக்ஷணை"தான்: இங்கு "ஊர்" என்னும் சொல்லுக்கு முக்கியமான பொருளைக் கொள்ளக் கூடாது. "ஊரிலுள்ள மனுஷ்யர்கள்" என்னும் பொருளையே ஏற்க வேண்டும். இப்போது சிக்கல் தீர்ந்து விட்டது. ஊரிலுள்ள மனிதர்களெல்லாம் (ஒருவர்கூட விடுபடாமல்) கதறியழுதார்கள் என்று அர்த்தமாயிற்று. இது சரிதானே! ஆனால் ஊர்-என்னும் சொல்லுக்கு, ஊரிலுள்ள மனிதர்கள் - என்று பொருள் கொள்வது நேர்மையானதல்ல. "லக்ஷணை"யினால்தான் இதைச் செய்ய முடியும். அவ்வாறே "नानृतं वदेत्" (பொய் சொல்லக் கூடாது) என்னும் வேத வாக்கியத்திலும் "லக்ஷணை"யினால் "பொய் சொல்லுவதில்லை என்று ஸங்கல்பம் செய்ய வேண்டும்" என்று பொருள் கூறலாம்; இதையே மீமாம்ஸகர்கள் செய்திருக்கின்றனர்.

ஆண்டாளுடைய செவிக்கினிய தமிழ்ப் பாசுரத்தில், ௸ மீமாம்ஸா நியாயத்தை உபயோகித்தால், இந்த 'லக்ஷணை'யின் அவசியமில்லாமலே—சாதாரணமான முறையிலேயே 'மனஸ்ஸங்கல்பம்' என்னும் பொருள் கிடைத்து விடுகிறது. 'நெய்யுண்ணோம்' 'பாலுண்ணோம்' 'மையிட்டெழுதோம்' 'மலரிட்டு நாம் முடியோம்' 'செய்யாதன செய்யோம்' 'தீக்குறளை சென்றோதோம்' என்னும் வார்த்தைகள் அகத்தில் தோன்றும் எண்ணங்களையே (ஸங்கல்பத்தையே) பிரதிபலிக்கின்றன!! 'லக்ஷணை'யில்லாமலே — நேர்ப் பொருளாகவே — மனஸ்ஸங்கல்பம்-என்னும் பொருள் மேற்படி சொற்கள் உணர்த்த வல்லதாக உள்ளமையை, யாவரும் எளிதில் உணரலாம். மேற்படி வார்த்தைகளை வாயினால் சொல்லிக் கொண்டே போனால் அவை மனத்தில் உள்ள எண்ணத்தின் வடிவமாகவே அமைந்துள்ளமை தெள்ளென விளங்கும். விசேஷ புண்ணிய காலங்களில், புண்

ணிய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்பவர்கள், 'ஸங்கல்பம்' சொல்லிக்கொண்டு நீராடுவார்கள். அது போல்தான் இதுவுமுளது.

இவ்வாறு எளிய முறையில் வேதத்தின் கருத்தை ஆண்டாள் விளங்க வைத்ததின் தத்துவமென்ன? இதுதான். வேத வாக்கியங்கள், விரதம் மேற்கொள்பவருக்காக உபதேசம் செய்வதற்காகவே தோன்றியவை. ஆதலால் அவ்வாறு(லக்ஷணையை அவசியமாக்கக் கூடிய வகையில்)அமைந்தன. இங்கு ஆண்டாள் அவ்வாருகப் பிறருக்கு உபதேசம் செய்யவில்லையே? தானே ஏனைய ஆய்ச்சிமார்களுக்கும் வழிகாட்டியாக நின்று விரதமனுஷ்டானம் பண்ணுகிறவன் சொல்லும் வார்த்தை, எடுத்த எடுப்பிலேயே ஆண்டாள் பாசுரத்தில் இடம் பெற்றுவிட்டது அவ்வளவுதான்.

இந்தப் பாசுரத்திலேயே மீமாம்ஸா ந்யாயத்தைக் கொண்டு நிர்ணயிக்க வேண்டிய மற்ெருரு விஷயமும் உளது. அதை இனி அனுபவிப்போம்.

'செய்யாதன செய்யோம்' 'தீக்குறளை சென்ருேதோம்' என்னுமிவ்விரண்டு விஷயங்களும் பாவை நோன்புக்காக மேற்கொள்ள வேண்டிய நியமங்களாகக் கூறப்படுகின்றன. பாவை நோன்பிற்கு முன்னும் பின்னும் இவ்விரண்டும் அவசியமில்லையா? மற்றும் பாவை நோன்பு நோற்காதவர்களான சாதாரணமான மனிதர்களுக்கு இவை அவசியமில்லையா? ஒரு நோன்பிற்காக அதை அனுஷ்டிப்பவர்கள்—நோன்பு நோற்கும் காலத்தில் மட்டும் மேற்கொள்ள வேண்டியவையான பற்பல நியமங்களின் வரிசையில் இவ்விரண்டும் சேர்த்துச் சொல்லப்படுகிறபடியால் இந்தக் கேள்விகள் எழுகின்றன.

இதே போன்ற விஷயம் வேதங்களிலும் பரவலாகக் காணப்படுகின்றது. மீமாம்ஸா ந்யாயம் அதன் தத்துவத்தை விளக்கிக் காட்டுகிறது. அதுவே இதற்கும் அமையும். அஃதெங்ஙனே என்னில்;

மேலே காட்டிய இரண்டாவது உதாகரணத்தில், "नानृतं वदेत्" என்பதை எடுத்துக் கொள்வோம். 'பொய் பேசக் கூடாது' என்பது இதன் கருத்து. ஒரு யாகத்தைப் பற்றிப் பேசுமிடத்தில் அந்த யாகத்திற்காகவே செய்ய வேண்டிய அங்கங்களைக் கூறும் வரிசையில் இதுவும் உபதேசிக்கப்படுகிறது. யாகம் பண்ணுவதற்கு முன்னும் பின்னும் பொய் பேசுவதனுல் தோஷமில்லையா? யாகம் பண்ணுத சாதாரணமானவர்கள் பொய் பேசுவது குற்றமில்லையா? யாகம் செய்பவரும் செய்யாதவருமான — பொதுவான மனிதவர்க்கத்தினர் யாவருமே — எக்காலத்திலும் பொய் பேசுவது மாபெரும் குற்றமாயிற்றே? இதை ஒரு குறிப்பிட்ட யாகத்திற்கேயான அங்கங்களின் வரிசையில் சேர்த்து வேதம் கூறுகின்றதே!

பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தில் மூன்றும் அத்தியாயம் நாலாம் பாதத்தில் இவ்விஷயம் விசாரித்து முடிவு செய்யப்பட்டுள்ளது. அதுவே திருப்பாவைவாக்கியத்துக்கும்பொருந்தும்.

வேத சாஸ்திரங்களில், 'செய்ய வேண்டும்' என்றும், 'செய்யக் கூடாது' என்றும் காணப்படும் விதி நிஷேதங்கள் இங்கு மூன்று விதமாகப் பிரிக்கப்படுகின்றன:

1. क्रत्वर्थम् (க்ரத்வர்த்தம்) குறிப்பிட்ட ஒரு யாகத்திற்காகவே செய்ய வேண்டியவை. யாகம் செய்பவர்— யாக காலத்தில் மட்டுமே இவைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் யாகம் சரியான முறையில் செய்யப்பட்டதாகும். கோரின பலனும் கிடைக்கும். செய்யாவிட்டால் யாகத்தில் குறைபாடு தோன்றிவிடும். கோரின பலன் கிட்டாது. அவ்வளவேயன்றி — பாவம் யாதும் ஏற்படாது.

2. पुरुषार्थम् (புருஷார்த்தம்) முந்தியதற்கு நேர்மாருனது இது. இந்த விதி நிஷேதங்களை மீறினுல் மனிதனுக்குப் பாவமுண்டாம். அவற்றை மதித்து நடந்தால் புண்ணியமுண்டாம். யாகத்துடன் இவற்றுக்கு யாதொரு தொடர்புமில்லை.

3. क्रतुयुक्त पुरुषार्थम (க்ரது யுக்த புருஷார்த்தம்) யாகத்தில் இழிந்துள்ள ஒருவன் அனுஸரிக்க வேண்டியவை இவை. இவற்றை மீறினுல் யாகமும் கெட்டுவிடும்-இவனுக்குப் பாவமும் ஏற்படும். அவ்வாறின்றிக்கே இவற்றை மதித்து அதன்படி நடந்தால், யாகமும் சரியானபடி முடியும்-இவனையும் பாவம் அணுகாது.

யாக ப்ரகரணத்தில் "பொய் பேசக் கூடாது" என்னும் நிஷேதம் இந்த மூன்ருவது பிரிவைச் சார்ந்தது.

சாதாரணமான மனிதனும்-யாகம் செய்பவனும் 'பொய் பேசக்கூடாது' என்பது அவசியமேதான். யாக காலத்தில் அதைச் செய்பவன்-பொய் பேசுவது அதிக தோஷமானது. 'தானும் கெட்டு சந்திர புஷ்கரிணியையும் கெடுத்தான்' என்னும் வகையில், யாகத்தையும் கெடுத்துப் பாவத்தையும் தேடிக் கொள்கிருன் இவன்.

''செய்யாதன செய்யோம்'' 'தீக்குறளை சென்ருேதோம்' என்னும் ஆண்டாளுடைய தமிழ் வேத வாக்கியமும் இந்த மூன்ரும் வகையைச் சார்ந்ததேயாம். சாதாரண காலத்திலேயே இவை தவிர்க்கப்பட வேண்டியவைதான். மீறினுல்? பாவம் வந்தடையும். நோன்பு நோற்கும் போது இந்த நிஷேதத்தை மீறினுலோ! நோன்பும் கெட்டுவிடும். கோரின பலன் கிட்டாது. பாவமும் வந்து சேரும். 'நோன்பு காலத்தில் மிகுந்த எச்சரிக்கை அவசியம்' என்பது திரண்ட பொருள்.

இளம் வயதில் கன்னிப் பருவத்திலேயேதான் ஆண்டாள் இன்கவி பாடினுள். பழுத்த மீமாம்ஸகர்களும் - வேதாந்திகளும் - அடியார்களும்-கலா ரஸிகர்களும் ஆழ்ந்து அனுபவிக்கக் கூடிய அற்புதமான விஷயங்கள் இவற்றில் எவ்வளவு நேர்த்தியாக அமைந்துள்ளன? ஆண்டாளுக்கு இயற்கையிலேயே அமைந்தான தெய்விகத் தன்மையும் - வேத சாஸ்திரங்களில் இணையற்ற தேர்ச்சி பெற்று - யாகங்களை அனுஷ்டித்து - திருமாலடியார்களுள் சிறந்து விளங்கினவரான பெரியாழ்வார் தான் இதற்குக் காரணம். எத்தனையோ மேதாவிகளான ரஸிகர்கள் திருப்பாவை வியாக்யானம் செய்துள்ளனர். அவற்றில், ரஸம் வெள்ளமிட்டோடுகிறது. பரம ரஸிகர்களான உபந்யாஸகர்களும் தாங்களனுபவித்து, கேட்போர்களையும் பரம ரஸிகர்களாக்கி விடுகின்றனர். வற்ருத அமுத ஊற்ருகிய திருப்பாவை நீடூழி வாழ்க. O

# ஸ்ரீ பாரத ஸாவித்ரீ ஸாராம்சம்

ஆதௌ பாண்டவ தார்த்தராஷ்ட்ர
ஜனனம்
லாக்ஷாக்ருஹே தாஹனம் த்யூதா
விஷ்கரணம்
வனே விஹரணம் மாத்ஸ்யாலயே
வர்த்தனம் |
லீலா கோக்ரஹணம் தராவிதரணே
ஸந்திக்ரியாற்ரும்பணம்
பஸ்சாத் பீஷ்ம் சுயோதனுதி ஹனனம்
ஹ்யேதந்மஹாபாரதம் ||

மேற்கண்ட சுலோகம் மஹத்தான மஹாபாரதக் கதையின் சாராம்சமாகும். 18 பர்வங்களில் காணப்படும் பல்வேறு நிகழ்ச்சிகளை 8 முக்கிய நிகழ்ச்சிகளில் சுருக்கி அளிக்கிறது இந்த சுலோகம். இவற்றில் கடைசி இரண்டு நிகழ்ச்சிகளை மட்டும் அழகாக வர்ணிப்பது "பாரத ஸாவித்ரீ'' என்ற ஒரு சீரிய பெரிய ஸம்ஸ்க்ருத காவ்யம்; ஸ்ரீ வியாஸ முனிவர் அருளியது. பல ஆண்டுகளுக்கு முன் 'ஸாஹித்ய சிரோமணி' ரா. சுதர்சன சர்மா அவர்களால் இது 1934-ல் கும்ப கோணத்தில் பிரசுரிக்கப்பட்டது. 90 சுலோகங்கள் கொண்ட இக்காவியத்தின் சிறப்புவாய்ந்த பகுதிகளைக் கீழே காண்போம்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா துவாரகையில் உள்ளார். குரு பாண்டவர்களிடையே யுத்தத்தைத் தவிர்க்க யுதிஷ்டிரர் வேண்டுகோள்படி கண்ணபிரான் தூது செல்கிறுர். ஹஸ்தினுபுரம் புகுந்த கண்ணன் விதுரரின் வீட்டை அடைந்தார். அளவிட முடியாத மகிழ்ச்சி யடைந்த விதுரர் தான் பெற்ற பாக்யத்தை மிக அழகாகக் கூறுகிறுர்.

"இன்று எனது செயல்கள், தவங்கள் யாவும் பயனடைந்து விட்டன; எனது ஞானமும், வாழ்வும் நற்பயன் பெற்றுவிட்டன. கோவிந்தன் என் வீடு தேடி வந்ததால் எனது பித்ருக்கள் ஜன்ம சாபல்யமடைந்து விட்டனர். திடீரென தாமோதரன் எனது இல்லம் வந்தடைந்ததில் சகலவித பித்ரு பூஜா பார்வண திதிகள் ஒன்று கூடிவிட்டன. ஆஹா! என்ன பாக்கியம் இது.''

அத்ய மே பிதரஸ் துஷ்டா கோவிந்தே
க்ருஹமாகதே |
அஷ்டமீ ச நவமீ ச சதுர்தசீ ச
அத்யாய
நஞ்ச விஷுவஞ் ச தினத்ரயஞ் ச |
அத்யைவ பிண்ட பித்ரு யக்ஞமகஸ்ய
காலோ தாமோதரேண
ஸஹஸா க்ருஹமாகதேன |
(சுலோகம் 7, 8)

இம்மொழிகளால் வழிபடப்பட்ட கண்ணபிரான் வேண்டிய வரம் அளிக்க முன் வருகிறுர். விதுரர் கேட்ட வரம் மிகமிக லோகப் பிரியமானது.

"ஹேமது சூதனு! வேத விற்பன்னர்களான விப்ர போஜனம், பந்துக்கள் நிறைந்த வீடு, மக்கள் சூழ சயன சுகம், ஆகியவற்றை அளிப்பீராக!''

"ஹேமதுசூதனு! விப்ரர்கள் என் மீது அக்ஷதை போட, தாயார் தன் கையால அன்னம் அளிக்க, தான தர்மங்கள் என் கையால் நிறைவேற வரமளிப்பீராக!''

போஜனம் விப்ர ஸங்கீர்ணம்
பந்து ஸங்கீர்ண மந்திரம் |
சயனம் ஸுத ஸங்கீர்ணம் தேஹி மே
மதுசூதன || 10 ||
அக்ஷதான் விப்ரஹஸ்தேன மாத்ரு
ஹஸ்தேன போஜனம் |
தானதர்மம் ஸ்வ ஹஸ்தேன தேஹி
மே மதுசூதன || 11 ||

**ஸ்ரீ பாரத ஸாவித்ரீ:**

கண்ணபிரான் தலைநகர் வந்துள்ள செய்தி துரியோதனனை எட்டியது; விதுரர் வீட்டிற்கு விரைந்தான். அரசன் என்ற தோரணையில் பேசலானுன்.

"ஹே மதுசூதனு! இங்கு பீஷ்மர் இருக்க, துரோணர் இருக்க அரசனுன நானும் இருக்க, ஹே புண்டரீகாக்ஷ! ஏன் இந்த வ்ருஷலன் வீட்டு போஜனத்தை நாடினுய்?'' (விதுரர் கலப்பு மணத்தால் பிறந்த ஓர் ஞானவான், கிருஷ்ண பக்தனும் கூட.)

"ஜனுர்த்தனன் பால் பக்தி இல்லாத எந்த வர்ணத்தாராயினும் அவர்கள் சூத்ர ஜாதியினரே யாவர். பகவத் பக்தியுள்ள பாகவத புருஷன் அளிக்கும் அன்னம் கங்கா ஜலம் போன்று, விஷ்ணு பாத தியானம் போன்று புனிதமானது; ஏகாதசீ விரதம் போன்று சுத்தமானது. புத்திமானுக உள்ள எவனும் சண்டாளனுன பக்தனை அவமதிக்க மாட்டான்'' எனக் கூறினுர் கண்ணபிரான். அவர் மேலும் பேசலானுர்.

**ஸ்கந்த நாராயணன்**

"எந்தக் குலத்தில் தோஷமில்லை? வியாதியால் பீடிக்கப்படாதவன் எவன் உளான்? துக்கத்திற்கு ஆளாகாத மானிடன் உளானு? நிரந்தரமான சுகம் எவனிடம் காணப்படுகிறது?''

"த்வைபாயனர் என்ற வியாச முனிவர் வாசவியின் கர்ப்பத்தில் உதித்தார். மதங்க மஹாமுனிவர் மாதங்கீ என்ற மாதுக்கு மகனுனுர்''

"உண்மை இவ்வாறு இருக்க நீ எனது போஜன ஸ்தலத்தைப் பற்றி

# திருவரங்கத் தெந்தாய்

திரு. டி. நவநீத கிருஷ்ணன்-போடிநாயக்கனூர்.

நாரங் கடைந்துநற் றேவர்க் கமுதளித்தத் துளப
ஆரங் களிக்கப் பொருதுதோள் வான முகினிறத்தாய்!
ஊரங் கெழுந்து விறல்வாகை தொண்டர் சூழுமியார்ப்ப,
நீரங் கண்ணிமேல் என்கொலோநேர் நோக்கில்லை யிங்கென்பாள்?

இங்கென்பர், அங்கென்பர் தூணதது மங்கனே! எவ்விடமும்
இங்கென்பர் என்பதல்லால் சொல்லிலைகாண்! என்தன கனியே!
இங்கென்பர் மெய்யடி போற்றுமெம மெய்யடியார்! என்னுவி
இங்கெனனும் நற்துளப மேறசோர்வாட் கிப்பூ பரக்கவே!

பரக்கபிப் பாரளக்க பண்டுதைத்த கஞ்சமலர்ப் பாத!
புரக்கநீ வுணடுமிழ்ந்த பாழ்களைப்போ? யானறிய யிங்கு
பரகக விரிந்தலைய தெண்ணீர் திருவரங்கந் தேரெந்தாய்
அரகக யிருளிரிய பேதைமேற் கொன்றுரையாய் வஞுசமே!

வஞ்சக் களமழிய செற்றூர் வலிதொலைய பாரும்
அஞ்ச வரிசங்க மேத்த வருங்களைப்போ? ஆஙகனே
கஞ்ச மலர்க்கயஞ் சூழும் திருவரங்கம் மேலோர்ந்தாய்
வஞுசி யிவளதிறத் தென்னும் வெறும்மயக்க மம்மம்மோ!

அம்போ ருகளாட் ககலவாக மீந்தும், கல்லவட்குச்
செம்போ ருகளும் பதமீந்தும், சொல்லறு கூந்தலாட்கு
வெம்போ ருகள கலைவமபா லீந்துங் களைத்தயெந்தே!
வெம்போ ருகளுமிம் மாவகத்தாட் கீயாயென் னூழேயோ!

ஊழிதோ றூழி யுமக்கேயா ளூழியப் பட்டுநில்லா
ஆழிக் கரத்தா லரக்கர் கணம்நீற்ற ஆழ்களைப்போ!
சூழிலங்கு நீரார் திருவரங்கத் தெந்தாய், சாபங்காண்,
தோழி நகைப்புரை நன்று, துனுக்குறறே னென்வினையே!

வினையே முனிய விரைகழல் நீலவணணன் வாளியம்
கனைனீர் இலங்கைகோன் கன்னெஞ்சு தூறக் கடுக்கயெம்
சுனையேய் மனத்துச் சுரந்த திருவரங்கத தெந்தாயெம்
மனையாய் மறுப்புரை மாறற வருளாயிம் மங்கைக்கே!

அங்கை யபயவாளி யார்ப்ப, அருமுனியின் வேள்விக்
கங்கை நெறிபடக காத்தயெங் கார்முகில் வண்ணனவன்,
திங்க ளமுது தெறிநீர் திருவரங்கத் தெந்தேவே!
கங்குல் கவித்த வரைமனத தாட்கருளாய் கனனலே!

கனியிதழச் செவ்வரிசேர்ந் தாடக் கனியை உவப்புண்ண
பனியிதழ்க் கண்ணிரங்க பண்டுண்ட வாயற்கு வூட்டுநல்
தினங்காக்கு நோன்பின் சபரிக் கருள்தந்த தேவதேவ!
பனித்துளிர் தேர்துளபம் பண்ணூர் மொழியாட் கருளாயே!

ஆயேயா மெவ்வுயிர்க்கு மின்னருளீந் திவ்வுல கேத்த
தாயேயாம் நான்முகற்கும் முக்கண் ணவர்க்குமாய், தானேயாய்
ஆயேயா யின்று வருளி யழித்துறைந்த யெந்தேவே!
நாயேயா யுன்னடி நோற்பாள் தமக்கரு ளின்னருளே!

குறை கூறுகிறாயே, ஏன் உனது ஆதரவு பற்றிப் பேசவில்லை? போஜனம் உண்டபின் ஜீரணமாகிவிடும்; ஆனால் ஒருவனளிக்கும் ஆதரவு நிரந்தரமான தல்லவா"''

இவ்வாறெல்லாம்குறுக்குக்கேள்வி போட்டு துரியோதனனை மடக்கி விட்டு விதுரன் வீட்டில் உணவருந்துவது தோஷமற்றதே எனவும் விளக்குகிறார் மாயோன் மாதவன்.

''சோறு கிடைக்காத நாளில் பிறர் வீட்டு உண்டியும், சிறறுண்டியும் மேற்கொள்ளலாம். அச்சமயம் 'பஞ்ச கவ்ய'ங்களில் ஒன்றான நெய்யை அன்னத்தில் அளிக்கப்பட வேணடும். உனனைப் பொறுத்த மட்டில் பிரீதிக்கு இடமில்லை. என்னைப் பொறுத்த மட்டில் நான் ஆபத்து நிலையிலும் இல்லை.''

''ஆதரவுடன் அளிக்கப்படும்'' காய்கறிகளுடன் கூடிய அன்னமே எனது உடலுக்கு பிரியகரமானவை. மானத்தை இழக்கச் செய்யும் போஜனம் அமுதமாகாது ''

இவ்வாறு விளக்கம் கூறிவிட்டு 'வெட்டொன்று துணடு இரணடு' எனறபடி முடிவாகக் கூறினார் கண்ணன்.

''வெறுக்கபபடும ஒருவனின் உணவை ஏறகக் கூடாது. வெறுக்கின்றவனுக்கு அன்னமும் அளிக்கக் கூடாது. ஹே அரசனே! நீ பாண்டவர்களை வெறுககிறாய்; அந்தப் பாண்டவர்கள் எனது உயிர்த்தோழரல்லவா!''

த்விஷதன்னம ந போக்தவ்யம
த்விஷந்தம நைவ போஜயேத் |
பாண்டவாள த்விஷஸே ராஜன
மம ப்ராணாஹி பாண்டவா: ||

சாப்பாட்டு விஷயம் பற்றிய வாக்கு வாதம் முடிந்தது. தூதாக வந்த காரியம தொடங்கிற்று. பகவான் பகரலானார்:

'பாண்டவர்களுக்கு ராஜ்யத்தில் சமமான பங்களித்து நூற்றுவர்

கொண்ட உனது குலம் க்ஷீணமடையாமல் பார்த்துக் கொள். பாண்டவர்கள் கேட்பதெல்லாம் இந்திர ப்ரஸ்தம், யமபரஸ்தம், அவந்தீ, வாரணாபுரீ, ஷஸ்திணபுரம என்ற ஐந்து கிராமங்கள்தான், குருவம்சத்தின் நலனை மனதில கொண்டு இதற்கு ஒப்புதல் அளிப்பாயாக. இதுவே நான் கூற விரும்புவது' என்றார்.

'தேவகி நந்தனா, கேள்! இந்திர ப்ரஸ்தம குருவுககு அளிக்கப்பட்டுள்ளது; யமப்பிரஸ்தம் கருபாசார்யாருககும், வாரணாபுரம் பீஷ்ம பிதாமஹருக்கும், அவந்தீ சூர்ய புத்திரன் கர்ணனுக்கும் அளித்தாகி விட்டது. எஞ்சியுள்ள ஹஸ்திணபுரம் என் வசமுளது. ஆகவே நான் ஊசி முனையளவுகூட பாண்டவர்களுக்கு இடம் அளிக்க மாட்டேன். முடிந்தால் யுத்தமிட்டு அவற்றை பெற்றுக் கொள்ளட்டும்'' என்றான் துரியோதனன்.

தூது வந்த கண்ணன் கூறுவதற்கு ஒன்றுமில்லை. எனினும் முடிவாக அர்த்த புஷ்டியுள்ள பின்வரும் வாக்களித்து வந்த காரியத்தை முடித்துக் கொண்டார்.

'ஹே கௌரவ! யுத்தத்தின் விளைவாக நீ தன்னந்தனியாக, கால் நடையாகத் திரியப் போவதில்லை எனின் தர்ம சாஸ்த்ரங்களை வகுத்த மனுக்கள் முதலியோர் யாவரும் மது மயக்கம் கொண்டவரே யாவர்'

'மாடுகள் பிடிபட்டது கண்டு, பூங்காவனம் அழிந்தது கண்டு யுத்தத்தில் இறங்கிய மூடர்கள் துர்யோதனனும், ராவணனும் ஆன இருவரே என உலகம் தூற்றும்' எனவும் கூறினார்.

இது வரை கூறப்பட்டவை கிருஷ்ணன் தூது படலம். இனி பாரதப் போர்ப் படலம் பற்றிய சில விவரங்களைக் காண்போம்.

மேதினீபாரநிர்ஹாரம்
பார்த்த சாரதிம் அச்யுதம் ।
ப்ரணமாமி ஹ்ருஷீகேசம்
துர்லபம் சக்ர பாணினம ‖

''பார்த்தனுக்குஅச்யுத சாரதியாய் செயல்பட்ட, சக்ராயுதம் ஏந்திய கையுடன் பூபாரம நீங்க பாரதப் போர் நடத்திய இதய நாதனாகிய ஹ்ருஷீகேசனை வணங்குவோமாக''.

'இந்த பாரதப் போர் ஓர் மஹத்தான யக்ஞம் போன்றது. ரணயக்ஞ தீக்ஷை பெற்ற யுதிஷ்டிரர் யஜமானன். குரு க்ஷேத்ரம் யக்ஞ மேடை. அர்ஜுனன் யூபஸ்தம்பம். அதில் கட்டப்பட்ட பசு துர்யோதனன். பீஷ்மரும் துரோணரும் மஹாஹவி. பாஞ்சாலியே பரணி. பீமனே அக்னி. கர்ணனும் ஜயத்ரதனும் ஆஜ்யமும் மஹா ஆஹுதியுமாவர். அர்ஜுனன ஹோதாரன். காண்டீவமாகிய ஸ்ருவத்தால் அரசர்கள் ஹவிர்ப்பலியாக அளிக்கப்பட்டனர். யாகத்தில் அளிக்க இயலாத திரவ்யமாக விளங்கியவர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஒருவரே?''

இப்படி ஒரு அழகிய வர்ணனை நான்கு சுலோகங்களாக இடம் பெற்றுள்ளது 'பாரத ஸாவித்ரீ'யில். இந்த பாரத யுத்தம் தொடங்கிய நாள், முதல் 18 நாட்கள் போரிட்ட கௌரவ ஸேனாதிபதிகள், அவர்கள் தோல்வி யுற்ற திதிகள், யுத்தத்தில் ஏற்பட்ட சதுர்வித சேனைகளின் சேதம் பற்றிய எண்ணிக்கை போன்ற விவரங்கள் இக்காவ்யத்தில் மிக அழகான பகுதிகளாக உள.

ஸாவசத்ருக்ஷயகரே
குருக்ஷேத்ரே மஹாத்மனா ।
நவநாக ஸஹஸ்ரேஷு
நாகே நாகே சதம் ரதா: ‖
ரதே ரதே சதம் சாஸ்வா
அஸ்வே அஸ்வே சதம் நரா: ।
பார்த்தேனரோபிதா: ஸ்வர்கே
ராஜபுத்ரா யஸஸ்வின: ‖

ஒன்பதாயிரம் யானைகள். ஒரு யானைக்கு நூறு வீதம் தேர்கள். ஒரு தேருக்கு நூறு வீதம் குதிரைகள். ஒரு குதிரைக்கு நூறு வீதம் காலாட் படைகள். இப்படிப்பட்ட சேனைகள குரு க்ஷேத்ரத்தில் அழிவுற்றன. இவற்றில் அமர்ந்து போரிட்ட ராஜ புத்திரர்கள் யாவரையும் பார்த்தன் ஸ்வர்கத்திற்கு அனுப்பி வைத்தான்.

ஹைமந்தே ப்ரதமே மாஸே
சுக்ல பக்ஷே த்ரயோதசீ ।
பரவ்ருத்தம பாரதம யுத்தம்
நக்ஷத்ரே யம தைவதே ‖

மார்கழி (டிசம்பர்-ஜனவரி) ஹேமந்த ருதுவின் முதல் மாசம். இதில் சுக்ல பக்ஷம் த்ரயோதசீ (13வது) திதியில், யமனைப் போல் கொடூரமாக தஹிக்கும் அக்னி பகவானை தெய்வமாகக் கொண்ட க்ருத்திகா நக்ஷத்ரத்தில் 18 நாள் பாரதப் போர தொடங்கிற்று: (அச்சமயம் மார்கழியே, ஜனவரி போல், வருஷாரம்ப மாதம).

திநாநி தச பீஷ்மேண
பாரத்வாஜேனபஞ்ச ச ।
தினத்வயம து கர்ணேன
சல்யேன அர்த்த தினம ததः ‖
தினார்த்தம் து கதாயுத்தம்
ஏதத் பாரதம் உச்யதே ।
ஏவமஷ்டாதச ஹதா அக்ஷௌஹிண்யோ தினக்ரமாத ‖

மேற் குறிப்பிட்ட சுலோகங்கள் 18 நாளில் 18 அக்ஷௌஹிணீ சைன்யங்கள் அழிந்த விவரம் அளிப்பவை யாகும்; இனி இப்பதினெட்டு திதிகளில் மாண்ட வீரர்கள் பற்றிய விவரம் காணபோம்.

கிருஷ்ண பக்ஷம சப்தமீ திதி உத்தரபால்குனீ நக்ஷத்ரத்தில் பீஷ்மர் வீழ்த்தப்பட்டார். நவமியில் பகதத்தன்; தசமியில் சௌபத்ரன்; ஏகாதசியில் ஜயத்ரதன்; அன்று நள்ளிரவு கடோத்கசன்; அன்று விடியற் காலையில் விராடன், துருபதன்; துவாதசி நடுப்பகலில் துரோணர்; சதுர்தசி முற்பகலில் துச்சாசனன்; சதுர்தசி பிற்பகலில் கர்ணன் மாண்டான். கர்ணனை இழந்தவுடன் கௌரவ

சேனை தாமரை மலர் போன்ற கண்களையுடைய முகம் காதுகளை இழந்ததுபோல் ஆயிற்று. அமாவாசையன்று மஹா கோரமான யுத்தம் நடந்தது. தர்ம புத்திரர் சல்யனையும், நகுல சகதேவர் சகுனியையும்; பீமஸேனன் துர்யோதனனையும், துரோண புத்திரனால் த்ருஷ்டத்யும்னன், சிகண்டீ, திரௌபதியின் 5 புதல்வர்களும் ஸ்வர்க்க லோகம் எய்தினர்.

10 நாட்கள் பீஷ்மர் தலைமை தாங்கி நடத்திய போரில் மட்டும் 8000 ரதங்கள், 900 யானைகள், 1000 ராஜ புத்திரர்கள் உயிர்த் துறக்க வேண்டியதாயிற்று.

ஹிந்துக்களின் கால கணனப்படி துவாபர யுக முடிவில் யுகாந்தரப் பிரளய காலக் காக்ஷியாக அமைந்தது இப்பாரதப் போர். இதை மையமாகக் கொண்டு பிறந்தது 18 பர்வங்களைக் கொண்ட, ஒரு லக்ஷம் சுலோகங்களைக் கொண்ட மஹா பாரதம் எனப்படும் இதிஹாஸ காவ்யம். அதி பௌதிக, அதி தெய்வீக, அத்யாத்ம இரகசியங்களை உள்ளடக்கிய இக்காவியம் ஒரு புனித கிரந்தம். ஹரி வம்சம் என்ற பகுதியுடன் சேர்ந்து இது ஒன்றே கால் லக்ஷம் சுலோகங்களைக் கொண்டதாகிறது: இதன் புனிதத் தன்மை பற்றிய சுலோகங்கள் பல உள: அவற்றுள் இரண்டு பின் வருமாறு:

பாதி ஸர்வேஷுவே தேஷு
ரதி: ஸர்வேஷு ஐந்துஷு |
தாரணம ஸர்வ பாபானும்
தஸ்மாத் பாரதமுச்யதே ||

வேதங்களில் ஐந்தாவது வேதம்; லோக ஸம்ரக்ஷணார்த்தம் நடந்த செயல்; சகல பாபங்களிலிருந்து-கீழ்த்தரமான போக்குகளிலிருந்து-மக்களை உயர்நிலைக்கு இட்டுச் செல்வது இது. ஆகவே புனிதமானது. மேலும்:

பாரதஸ்ய ஸமுத்ரஸ்ய
மேரோ, நாராயணஸ்ய ச |
அபரமேயானி சத்வாரி
புண்ய தோய குஹா குண: ||

என்ற சுலோகப்படி உலகில் இணையற்ற பொருள்கள் நான்குள. அவற்றில் பாரதம் தனது புனிதத் தன்மையிலும், ஸமுத்ரம் அதன் நீர்ப் பரப்பிலும், மேரு பர்வதம் தனது குஹைப் பகுதிகளிலும், ஸ்ரீமந் நாராயணன் தனது குண விசேஷங்களிலும் இணையற்ற வஸ்து சொரூபங்கள்.

இவ்வித ஒரு புனி கிரந்தத்தை, நித்ய பாராயணமாக ஏற்க தற்கால சூழ்நிலை குறுக்கே நிற்கிறது. இக் காரணத்தை மனதில் கொண்டுதான் ஸாஹித்ய சிரோமணி ரா. சுதர்சன சர்மா அவர்கள் இந்த 'பாரத ஸாவித்ரீ' என்ற சிரிய பெரிய காவ்யத்தில் மஹாபாரதம் படிப்பதால் ஏற்படும் புனித நிலை இந்தக் காவ்யத்தைப் படிப்பதாலும் ஏற்படும் என்கிறார் ஆசிரியர். இக்காவியம் வேத வியாஸரால் அளிக்கப்பட்டது என்கிறார்.

இமாம் பாரத ஸவித்ரீம்
பராதருத் தாய ய: படேத் |
ஸப்த ஜன்ம க்ருதை: பாபை:
ஸ முக்த: ஸுகமேததே ||

மானிட ஜீவன் தனது லக்ஷ்யமாகிய ஜீவ-ப்ரஹ்ம ஐக்கிய உணர்வு நிலைக்கு வந்து சேர பல்வேறு பரிணாம நிலைகளை மேற்கொள்ள வேண்டி வருகிறது. இதையே புராணகர்த்தாக்கள் ஈரேழு பதினாலு லோகங்களாகக் குறிப்பிடுகின்றனர். இவற்றில் ஏழு பூவுலக அறிவு நிலைகளை மேற்கொண்டு செயல்படும் ஜீவான்ம ஏழு பிறப்புகளைக் கடந்து வருவதாகக் கருதப்படுகிறது. 'பாபம்' என்ற சொல் விரிவான பொருள் நிலையில் ஆன்ம சக்தியை கீழ்நிலைக்கு இட்டுச் செல்லும் சக்தி வாய்ந்த செயல் என்றாகும். கீழ்த்தர அறிவு நிலையில் நடந்தேறும் ஜீவனின் செயல்களே 'ஸப்த ஜன்ம க்ருதம் பாபம்' எனக் கொள்ள வேண்டும். மஹாபாரதத்தின் புனிதத் தன்மை ஜீவனை புனிதப்படுத்தி, பாபங்களை அகற்றி, உயரிய நிலைகளுக்கு இட்டுச் செல்வது; மோக்ஷமளிப்பது; சரீர பந்தனத்திலிருந்து விடுவிப்பது. உயர்நிலைகளான ஸ்வர்க்க லோகங்களை ஒளி உலகங்கள் என்பர். அந்தரங்க ஒளி நிலைபெற்ற ஜீவன் அறிவு நிலையில் சஞ்சரிக்கும் சூக்ஷ்ம லோகங்களே இவை. ஆகவே இந்த பாரத ஸாவித்ரியின் பல சுருதி எவ்விதத்திலும் மிகைப்படக் கூறியதல்ல. இதை ஸ்ரீ கண்ணபிரான் கீதோபதேசம் அளித்த மார்கழி மாதம் முழுவதும் உஷத்கால பாராயணம் பண்ணுவதால் நாதபிரம்ம உபாசனா பலம் ஏற்படும். மார்கழியை தனுர்மாசம் என்பர். தனுஸ் என்பது வில் அதை ப்ரணவத்திற்கு ஒப்பிடுவர் (ப்ரணவேதனு:) ஆகவே மார்கழியில் வேதப் பிரமம உபாசனையாகிய காலை நேர திவ்யநாம ஸங்கீர்த்தனங்கள் நடந்தேறி வருகின்றன. ஸ்ரீ பாரத ஸாவித்ரீ' பாராயணமும் ஒரு திவ்ய நாம ஸங்கீர்த்தன புருஷராகிய பரந்தாமனின் லீலாகதாம்ருதமே.



# அழலாடிய ஆரழகன்

மாட்டுப்பள்ளி மகிழ்ந்துறை வீர்க்
கெலாம்
கேட்டுப்பளளி கண்டீர் கெடுவீரிது
ஓட்டுப்பள்ளி விட்டோடலுறுமுனம்
காட்டுப்பள்ளியுளான் கழல்
சேர்மினே.''

தஞ்சை மாவட்டத்தில் திருக்காட்டுப்பள்ளி என்ற பெயருடைய இரண்டு சிவத்தலங்கள் உண்டு. ஒன்று மேலைத் திருக்காட்டுப்பள்ளி மற்றது கீழைத் திருக்காட்டுப்பள்ளி. முன்னது கல்லணையிலிருந்து பத்துக்கல் தொலைவில் கிழக்கே உள்ளது. அதைப்பற்றியே இககட்டுரையில் நாம் காண இருக்கிறோம். மற்றது கீழைத்திருக்காட்டுப்பள்ளி; ஆரண்யேச்வரம் என்றழைக்கப்பட்டுத் திருவெண் காட்டிற்கு அருகில் உள்ளது. அர்ஜுனன் பாசுபதம் பெற்றது இவ்விடத்திலேயேயாகும்.

மேலைத் திருக்காட்டுப்பள்ளியே பொதுவாகத் திருக்காட்டுப்பள்ளி என்றழைக்கப்படுகிறது. இவ்வூர்ப் பெயரின் முடிவில் உள்ள ''பள்ளி'' என்ற அடைமொழியைக் கொண்டு பண்டைக் காலத்தில் இது சமணர்களின் இருப்பிடமாக இருந்திருக்கலாமெனக் கருதப்படுகிறது. அருகிலுள்ள விஷ்ணம்பேட்டையில் கிடைத்த சமண தீர்த்தங்காரகளின் சிலைகள் இவ்வுணமையை உறுதிப்படுத்துகின்றன. இச்சிலைகள் திருக்காட்டுப்பள்ளி உயர்நிலைப்பளளியில் தற்போது அமைந்துள்ளன.

திருநாவுக்கரசு சுவாமிகளும், சம்பந்தரும், சுந்தரர் பெருமானும் இத்திருக்காட்டுப்பள்ளியில் உள்ள அக்னீச்வரப் பெருமானைப் பாடியுள்ளனர். இவர்களில் அப்பரும் சம்பந்தரும் பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரவர்மன் வாழ்ந்த கி. பி. ஏழாம் நூற்றுண்டின் முதல் பகுதியினர். எனவே அப்பொழுது முதற்கொண்டே இத்திருக்கோயில் உன்னத நிலையில் இருந்ததை அறியலாம். பல்லவர்களின் பிற்பகுதி அரசரில் ஒருவனான நந்திவர்மன், இக்கோயில் பெருமான் மீது மிகவும் ஈடுபடுடையவன். இங்கு உறையும் சிவபெருமானுக்கு இவ்வரசன் மனைவி மாலை தொடுத்திருக்கையில், அதில் கூந்தல் முடி ஒன்று இருப்பதைக் கண்டு அவள் அதனைத் தன் தலையில் சூடி விட்டாளென எண்ணி அவளது கரங்களைத் தன் வாளால் துண்டித்து சிவாபராதம் போக்கினுன் என்ற செவி வழிக் கதையும் ஒன்றுண்டு. மற்றுமொரு முறை சான்றோர்க்கு இவ்வூரில் நேர்ந்த அபராதத்தால் மண் மாரி பொழிந்து ஊர் மேடிட்டதாகவும், அதனால்தான் சிவலிங்கத் திருவுருவம் பூமி மட்டத்திற்குப் பல அடிகள் கீழே அமைந்துள்ளதாகவும் கதை ஒன்று கூறுவர். உண்மையாதெனில் அருகிலுள்ள காவிரி அடிக்கடி தன்போக்கை மாற்றிக் கொள்வதால்கோவில், மணலால்மூடப்பட்டுப் பிறகு தோண்டப்பட்டு கர்ப்பகிரகம் மீண்டும சமதளத்திற்குக கீழே உருவாகியிருக்கலாம். இதனை ஏன் இவ்விதம் அறுதியிட்டுக கூற முடிகிறது என்றுல் அருகில் கொள்ளிடக்கரையில் உள்ள திருக்கானூர் என்னும் சிவத்தலம் பல்லாண்டு காலமாக மணலால் மூடப்பட்டு அண்மையில்தான் தோண்டி எடுக்கப்பட்டு அங்கு வழிபாடுகள் நடந்து வருகின்றன. ஒரு காலத்தில் அது போன்ற நிலைமை இக்கோயிலுக்கும் நேர்ந்திருக்கலாம்.

அப்பர் பெருமான் இவ்வூரைக 'கான வேடர் கருதும் காட்டுப்பள்ளி' என்று குறிப்பதால் இவ்வூரைச் சூழ்ந்து இதன பெயருக்கேற்ப காடு ஒன்று மண்டியிருந்தாக அறியலாம. 'கற்றவர் கருதும காட்டுப்பள்ளி' என்றும் அழைப்பதால் சான்றோர் நிறைந்த ஊர் என்பதும் புலனுகிறத. அப்பர் பெருமான் மேலும் ''காலையே தொழும் காட்டுப்பள்ளியுறை நீலகண்டனை'' என்று கூறுவதால் இது சூரியனுல் பூஜிக்கப்பட்ட தலம் என்பது புலனுகிறது. அக்னீச்வரன் என்ற இந்த இறைவனின் திருநாமம் அக்னியாலும் இவர் வழிபடப் பெற்றவர் என்பதை உறுதிப்படுத்துகிறது. தற்போதைய பஸ் ஸ்டாண்ட் அமைந்துள்ள இடம் அக்னி தீர்த்தம் என்று ஒரு காலத்தில் திருக்குளமாக இருந்திருக்கிறது.

---

திரு. பி. சுந்தரராமன், M.A., B Ed.
பழமார்னேரி.

---

அதன் நினைவுச் சின்னமாக ஒருசிறு கிணறு மட்டும் இன்று நன்னிலையில் உள்ளது உறையூர் சோழனும் அரசியும் இத்தலத்தில் தவமிருந்து சோழ நாட்டின் பஞ்சம் தீர்க்கும் வரம் பெற்ற செவி வழிச் செய்தியும் உணடு.

இக்கோயில் கர்ப்பகிரகம முதல் விமானம் ஸ்தூபி முடிய யாவும் கருங்கல்லால் ஆனவை. கர்ப்ப கிரகமும் அர்த்த மண்டபமும் மட்டுமே இக்கோயிலில் பழைய பாகம் ஆகும். இதனைச் சேர்ந்த இரு துவார பாலகர்களையும் இடம் விட்டுப் பெயர்த்து முன் மண்டபத்தில் தற்போது இருத்தியுள்ளனர்.

கர்ப்ப கிரகம் சதுர வடிவமானது. அடியில் யாளி வரிசையையும் கொடுங்கையின் அடியில் பூதகண வரிசையையும் காணலாம். இடையே புலி, சிங்கம், ரிஷபம் முதலிய சிலைகளைக் காணலாம். இக்கோயில் கிழக்கு நோக்கிய ஸன்னிதியை உடையது. தக்ஷிணாமூர்த்தி, அர்த்தநாரி, பிரம்மன் ஆகியோர் கற்சிலைகள் கர்ப்ப கிருஹத்தைச் சுற்றி அமைந்துள்ளன. இதனை கி. பி. 9ம் நூற்றாண்டில் ஆண்ட இராஜகேசரிவர்மன் ஆதித்த சோழன் (கி. பி. 871-907) கற்றளியாக்கினான் என்று வரலாற்றாசிரியர் கூறுவர். அதற்கு முன்பே பல்லவர் காலத்திலிருந்தே கோயில் இருந்திருக்கிறது. ஆதித்த சோழன் காலத்தில் இக்கோயிலில் நந்தா விளக்கு எரிக்கக் கொடுத்த தானத்தைப் பற்றிய கல்வெட்டு ஒன்று கோபுர வாசலில் காணக்கிடைக்கிறது.

இக்கோயிலில் உள்ள சௌந்தர நாயகி அம்மன் ஸன்னிதி சுந்தர பாண்டியன (கி. பி. 1216) காலத்தில் கட்டப்பட்டது. இப்பாண்டியனின் கல்வெட்டுக்கள் இரண்டு அம்மன் கோயில் கர்ப்ப கிரகச் சுவர் மேற்குப் பகுதியில் காணக் கிடைக்கின்றன. கி. பி. 1229ல் அருகில் உள்ள பழைய மாறனேரியான தின சிந்தாமணி சதுர்வேதி மங்கலம், ஒன்பதிற்று வேலி, முலலைக்குடி ஆகிய ஊர் நிலங்கள் இவ்வூர் ஈசனுக்கு இறையிலியாக வழங்கப்பட்டதைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் உள்ளன. 16ம் நூற்றாண்டில் விஜயநகர ஆர வீட்டு அரசர் திருமலை தேவராயர் பல நிபந்தங்களை அளித்த கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கோயிலில் உள்ள நடராஜர், மணி வாசகர், சண்டிகேச்வரர் ஆகியோர் செப்புத் திருமேனிகள் சிற்பத் திறமையும், பொலிவும் வாய்ந்தவை.

இக்கோயிலில் நடைபெற்று வரும் விழாக்களில் பங்குனி உத்தர விழா இன்றியமையாதது. காவிரிக் கரைக்கு பஞ்ச மூர்த்திகளும் எழுந்தருளுவர். ஆற்றின் நடுவில் அலங்காரப் பந்தலில் இறைவனின் திருமேனிகளுக்கு அபிஷேகம் ஆராதனை ஆகியவை அன்று முழுவதும் நடக்கும்; வண்ண விளக்குகளால் செய்யப்படும் அலங்காரங்கள் சொல்லத் தரமன்று. அருகில் பதினைந்து கல தொலைவில் சுற்று வட்டாரத்தில் உள்ள அனைத்து சிற்றூர் மக்களும் திரளாகக் கூடுவர். இசை நிகழ்ச்சிகள் நடைபெறும் ஊரிலுள்ள பால் தண்டபாணி ஆலயத்தில் தீமிதி, அலகு காவடி எடுத்தல் போன்றவை திகழும். மறுநாள் காலை மேள வாத்யங்களுடன் திருக்கோயிலுக்கு ஈசன் மீண்டும் எழுந்தருளுவார்

இக்கோயிலைத் தமிழக அறநிலையத் துறையினர் நனகு பரிபாலித்து வருகின்றனர். அண்மையில் ராஜ கோபுரம் திருப்பணி செய்யப்பட்டு குட முழுக்கு நடந்தேறியுள்ளது; தஞ்சை-கல்லணை பஸ் மார்க்கத்தில் திருக்காட்டுப்பள்ளி உள்ளது. பூதலூர் புகை வண்டி நிலையத்திலிருந்தும இதனை அடையலாம். திருச்சியிலிருந்து கல்லணை வந்தும் இவ்வூர் அடையலாம். நகர மக்களும், வணிகர் பெருமக்களும், ஆபரணக் கைவினைஞர்களான விசுவகர்ம வகுப்பைச் சேர்ந்தோரும் இக்கோயிலைக் குறைவின்றிக் கவனித்துக் கொள்கின்றனர். இவ்வூரில் பிரபலமாக இருந்து வரும் சர். சிவசாமி ஐயர் பேரறக் கட்டளையினரும் நிரந்தர நிறைவான தர்மங்களாக இக்கோயிலுக்குச் செய்ய முன் வந்தால் சிவ நேயச் செல்வர்களை இது மேலும பெரு மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தும்.

திருக்காட்டுப் பள்ளியை சுற்றியுள்ள நேமம, செந்தலை ஆகியவை முத்தரையர் தலைநகர்களாக இருந்திருக்கின்றன. அருகிலுள்ள வரகூரில் வேங்கடேசப் பெருமான் கோயில் கொண்டுள்ளார். நாராயண தீர்த்தர் கிருஷ்ண லீலாதரங்கம் பாடியது இவ்வூரில்தான். 'திருப்பேர் நகர்' என்றும ''அப்பால் அரங்கம'' என்றும "அப்பம் கொடுததான்'' என்றும் புகழப்படும் கோவிலடி இத திருக்காட்டுபபள்ளி அருகில் உள்ளது. இங்கும் பெருமாள் பள்ளி கொணடிருக்கிறார். திருக்கானூர், தில்லை ஸ்தானம, திருவையாறு போன்ற சிவத்தலங்கட்கும இங்கிருந்து எளிதில் செல்லலாம்.

எனவே சிவ பக்தர்களும் விஷ்ணு பக்தர்களும் ஒருமுறை திருக்காட்டுப் பள்ளிக்கு வருகை தாருங்கள்!! வந்து பரமனருள் பெறுங்கள். ★

## ஐந்தும் மூன்றும்

'' அஞ்சும் மூனறும் உண்டானால அறியாப்பெண்ணும் கறியாக்கும்''

என்பது பழமொழி. இதற்கு அஞ்சும் மூன்றும் எட்டுவயதானால பெண் சமைப்பாள எனறும, ஐந்தறைப் பெட்டியும, அடுப்பும சரியாக இருககுமாயின பெண் நன்கு சமைப்பாள என்றும் உலக வழககில் பொருள கொள்வர். ஆனால் இதற்கு உணமையான பொருள் :

இவ்வுலகத்தை சித்து, ஜடம் ஆகிய பொருள்களைககொண்டு படைக்கிறாள் அன்னை. ஜடத்தை ஐந்து தத்துவங்களாலும், சித்தோடு இணைந்த மனத்தை மூன்று குணங்களைக் கொணடும் படைக்கிறாளாம். வேத முனிவர்களும ஞானிகளும் அறியாத பெணணாகிய பராசக்தி முக்குணத்தையும் ஐம்பூதங்களையும் கொண்டு உலகததைப் படைத்து நடாத்துகிறாள் என்பது இததொடர் மூலம் அறியப்படுகிறது.

**திரு. மீ. சீனிவாசன், எம்.ஏ.பி டி., பரமக்குடி.**

# ★ பயனை எண்ணாதே ★

திரு. வெண்பாவூர். பொ திருஞானம்

பூவுலகில் இறைவன் மனிதனைப் படைத்தது உயிர்களுக்குத் தொண்டு செய்வதற்காகத்தான். ஆனால் மனிதன் தன் தொண்டினைச் செய்கிறானா என்றால் இல்லை என்றேகூறலாம். உலகில் பிறந்த மக்களனைவரும் தத்தம் கடமையினைச் சரவரச் செய்யாத காரணத்தினாலேயே வன்முறைச செயல்களும், கொலை, கொள்ளை போன்ற கொடிய செயல்களும் பெருகிக்கொண்டு வருவதை நாள்தோறும் காண்கின்றோம். ஆண்டி முதல் அரசோச்சுவோர் வரை கடமையை முழுமையாக நிறைவேற்றுவதில்லை. கடமையைச் செய்வதன் மூலம் நாடு முழுப்பயனை அடைய முடியும். தனி மனிதன் தன் கடமை பற்றி அறிநது செயல்பட முனைந்தால் அடையும் பேறுபற்றி இவண ஆராய்வாம்.

''இவ்வுலகம் இறைவனுடையது. உன்னுடையது அல்ல என்று உறுதியாக அறிந்து கொள் நீ அவனது கட்டளையைப் பூர்த்தி செய்வதற்காக வந்துள்ள அவனது பணியாளன் என்றே அறிக'' என்று பகவான் இராமகிருஷ்ணர் கூறுகிறார். ஆனால நாம் என்ன எண்ணுகிறோம்? இநத உலகம் என்னுடையது. இதறகு நானே அதிபதி. ஏனையோர் அடிமைகளே என்று எண்ணுகிறோம.

செயல்படுகிறோம். செய்யதககாத காரியங்களையெல்லாம செய்கிறோம். இதனால் உயிர்கள் படுந்தொல்லைகளோ சொல்லுந்தரமன்று. எனவே நன்மை தரத்தக்க செயல்கள் எவவளவு உண்டோ அவ்வளவையுமசெய்து முடிக்கவேண்டும். ''நீ இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் எந்தச் செயலும் ஆயிரம் மடங்காக உனக்கே திரும்பும். ஆகவே எந்தக் கருமத்தின் முடிவிலும் அதன பலனைக் கிருஷ்ண பகவானுக்கே அர்ப்பணம் செய்தற்கு அறிகுறியாக ஒரு கை நீரை அள்ளி விடவேண்டும்'' என்று பகவான் இராமகிருஷ்ணர் மேலும் வலியுறுத்திச் செல்கின்றார்.

அறமும தொண்டும் இரு கண்களென்றும் போற்றிக் கூறுவர் தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்கள். தொண்டு செய்யச் செய்ய அறம் வளரும் என்பார். அறம் தொண்டு முதலியன ஒட்டிப்பிறந்த இரட்டை வாழைகள்? பிரிக்க முடியாதவை அறவாழ்க்கையின் அடையாளம் தொண்டு என்றால் அதுமிகையாகாது. தொண்டே இறைவழிபாடாகும். அதுவே நிறை வழிபாடாகும் என்பர் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள்.

உயிர்கள் எல்லாம் கடவுளின் படைப்பே. அனைத்து உயிர்களிலும் ஈசன் குடியிருக்கின்றான். தூய உள்ளமே ஈசன் உறையும் திருக்கோயிலாகும். உயிர்களிடம் கருணை காட்டு உனககுககிட்டும் கடவுளாசி உயிர்களை வநதனை செய் அதுவே இறைவழிபாடு. மக்கட்குச் செய்யுந தொணடே மகேசனுக்குச் செய்யுந் தொணடாகும. மனிதனே நடமாடுங் கோயில். அவனுக்கு ஆற்றுந்தொணடே ஆண்டவன் தொண்டு; ஆலயத தொண்டு என்று நாட்டு மககளுக்கு அவர் நல்லறிவு கொளுத்தினார்.

கல்கத்தாவில வசித்து வரும் நோபல்பரிசு பெற்ற அன்னை தெரசா அவர்களிடம் சென்று நாம் ஏதாவது உதவி கேட்டால் வானத்தைநோக்கி ''கடவுளே உனக்கு நன்றி'' என்று சொல்வார்கள். ''என்ன கடவுளுக்கு நன்றி என்று சொல்கிறீர்கள்? நாங்களல்லவா நன்றி சொல்ல வேண்டும'' என்று அன்னையாரைக் கேட்டால் அவர்கள் சொல்வார்கள்:- ''நீங்கள் என்னிடம் உதவி நாடி வந்துள்ளீர்கள். என்னால் இயன்ற உதவியைச் செய்யக்காத்திருக்கின்றேன். உதவி செய்து அனுப்புவதில் எனக்குமிகுந்த விருப்பம். இம்மாதிரி வாய்ப்பினை அளித்த இறைவனுக்கு நனறியல்லவா சொல்லவேண்டும். அதனால்தான் கடவுளே உனக்கு நன்றி என்று சொன்னேன்''.

''செயதலுன கடனே — அறம
செய்தலுன் கடனே — அதில்
எய்துறும் விளைவினில் எண்ணம
வைக்காதே ''

கடமையைத் தவறாது நிறைவேற்ற வேண்டும். அதனால் விளையும் பயனைப் பற்றிக கவலைப்படக்கூடாது. அதன் மீது பற்றி வைக்ககூடாது என்று ஞானிகள் அறிவுறுத்துகின்றனா

குருக்ஷேத்திர போர்ச்களம். பாணடவர் படைகளும கௌரவா படைகளும் எதிர் எதிராகப் போர்க கோலம் பூணடு நிற்கின்றன. வில் விஜயன் கையில் காணடீபத்துடன் ரதத்திலே செல்கிறான். அவனுககு எதிரில் உற்றார் உறவினா போருககு அணிவகுத்து நிற்கின்றனர். இக் காட்சி விஜயனின் உள்ளத்தை வேதனைப்படுத்துகிறது. இவாகளையா கொல்வது, போரில் வெற்றி பெறுவது எனறு மயங்கி நிற்கிறான் அர்ச்சுனன்.

'' சுற்றம் கொல்வேனோ — இனி
அற்றமின் செயும் அரசுமோர்
அரசோ? ''

என்று எண்ணுகின்றபோது அர்ச்சுனன் கையிலிருந்து காண்டீபம் மெல்ல நழுவி விடுகிறது. கடமை செய்ய வேண்டிய அர்ச்சுனன் கடமை தவறப் பார்க்கிறான். இதனைத் தேரோட்டியாக வந்த கண்ணபிரான் உணர்ந்து கொண்டார்.

''வில் விஜயா! நீ செய்வது சரியில்லை. உனது கடமை எதிரிகளை அழிப்பதுதான். பந்த பாசத்தை எண்ணிப்பார்க்க நேரமில்லை விஜயா''

''என் உறவினர்களை எப்படிக் கொன்று போடுவேன்?'' பார்த்தனின் வேதனையான பதில்.

கடமையாற்ற வேண்டிய நேரத்திலே குழம்பி நிற்கலாமா? நேர்மையாகக் கடமையாற்றும் நெறியினை எடுத்தியம்புகின்றான் கண்ணன்.

வாடி நில்லாதே; — மனம்
வாடி நில்லாதே — வெறும்
பேடியர் ஞானப்பிதற்றல் சொல்லாதே

''அர்ச்சுனா! போர்க்களத்தில் வீரனின் கடமை என்ன தெரியுமா? எதிரிகளை அழித்து வெற்றி பெறுவதைத் தவிர வேறில்லை. எனவே போர் செய்வது உன் கடமை. போர் செய்வதால் பயன் என்ன என்று எண்ணிக் கடமையில் தவறினால் அது கோழைத்தனமாகும். ஆன்மாவுக்கு அழிவு என்பது கிடையாது. எதிரிகளைக் கொல்லுவதாக நினைப்பது அறியாமை. 'நான்தான் அவர்களைக் கொல்கிறேன்' என்று நீ எண்ணுவது அகந்தையாகும், இறைவன் கையில் நீர் அற்பமான கருவி. எனவே 'நான்' என்ற அகந்தையை நீக்கி உள்ள கடமையினை உறுதியுடன் செய். வினையும் பயனில் பற்றில்லாமல் கடமையினைச் செய்வாயாக.

'' வில்லினை எடடா — கையில்
வில்லினை எடடா — அந்தப
புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி
செய்திடடா!
செய்தலுன கடனே — அறம
செய்தலுன் கடனே — அதில
எய்துறும் விளைவினில் எணணம
வைக்காதே ''

கண்ணனின் ஞான உரைகளால் வில் விஜயன் துள்ளி எழுநதான. காண்டீபம் ஒலித்தது. கடமை நிறைவேற்றப்பட்டது. அதர்மம் அழிந்தது. தர்மம் நிலைத்தது.

வாழ்க்கை எனபது போர்க்களம். உடல் என்பது தேர். ஐம்புலன்களும் குதிரைகள். மனது கடிவாளம். தேரை ஓட்டுவது புத்தி. புகட்டும் ஞானமாகவும் கொள்ளலாம என்கிறார் விவேகானந்தர்.

உலக வாழ்வும் ஆன்மீக நெறியும் முரண்பட்டதல்ல. கடமையைச் செய்வது கடவுள் ஞானத்துக்கு மாறுபட்டதல்ல. பற்று நீக்கிக் கடமை ஆற்றுவதே பரமனைப் பற்ற உற்ற சாதனமாகும் என்று உபநிடதம் கூறுகிறது. பற்றுதல் இன்றிக் கடமையாற்ற கடவுளுணர்வே துணை நிற்கிறது. 'நான்' 'எனது' என்பவற்றை நீக்கிடல் வேண்டும், விருப்பு வெறுப்பு இல்லாமல் செயல்பட வேண்டும். இவ்வாறு செயல்படும்பொழுது 'நான்' 'எனது' என்ற எண்ணம் அறவே ஒழிந்து விடும்.

'' யானே என்னை அறிகிலாதே
யானே எனதனதே என்றிருந்தேன்
யானே நீ என்னுடைமையும நீயே
வானே யேத்தும் எம் வானவ
ரேறே.''

*(திருவாய்மொழி 2:4)*

நானே நீ என்பதுமட்டுமன்று, கருமம், கருமத்தின் பயன், கருமத்திற்கான காரணம் எல்லாம் கடவுள் தான் என்கிறார் நம்மாழ்வார்.

கடவுளின கருவியாக நாம் இயங்குகிற போது காரியம் கைகூடவில்லையென்றாலும் கவலைப்படுவதில்லை. வினையும் பயனால துன்பமோ துயரோ நமக்கு வருவது கிடையாது. பக்தியுடன் பயன் கருதாது தொண்டு செய்வதினால் துன்பமும் துயரமும் நெருங்குவதில்லை என்பதை மகாகவி பாரதி இவ்வாறு கூறுகிறார்.

பயனெண்ணாமல் உழைக்கச் சொன்னான்
பக்தி செய்து பிழைக்கச சொன்னான்,
துயரிலாது எனைச செய்து விட்டாள்;
துன்பம என்பதைக்கொயது விட்டாள்

உற்ற கடமைகளைச் செய்வதிலே கடவுளின கருவியே நாம் என்ற உணர்வுடன் செயலபட வேண்டும. தான், தனனலம முதலியவற்றைத் துறக்கின்றோம. வினையும பயனில் பற்று நீங்கி விடுகிறது, பந்தம, துன்பம் தோன்றுவதில்லை. வாழ்வாங்கு வாழ்வதறகு இதனினும் வேறு வழியுண்டோ?

''என் கடன் பணிசெய்து கிடப்பதே''

★

## அறிவிப்பு

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட ஸ்ரீ வேங்கடேஸ்வரரும ஸ்ரீ பத்மாவதி தாயாரும் இணைந்த திருவுருவங்களைக் கொண்ட மூவண்ண நாட்காட்டிகளும், ஸ்ரீ வேங்கடேஸ்வரரின திருவுருவம் கொண்ட மூவண்ண நாட்காட்டிகளும் விற்பனைக்கு உள்ளன. விலை மற்றும விலைக்கழிவு விவரங்களுக்கு ஆங்கிலத்தில் கீழ்வரும முகவரியுடன் தொடர்பு கொள்ளவும.

The Welfare Officer,
Publication Section.
T. T. Devasthanams,
TIRUPATI,

# ஆழியானைப் பற்றிய அருங்கதைகள்

திரு. இல. பாஷ்யம்
திருக்குடந்தை.

**முன்னுரை :**

ச்ரிய: பதியான நாராயணனை என்றும் பிரியாமல் வழுவிலா அடிமை செய்து புகழ்பெற்ற நித்ய ஸூரிகளில் சக்கரத்தாழ்வான் முதன்மையோன். அழகுக்கு அழகுசெய்வது போல எம்பெருமானின் அழகிய கரங்களுக்கு ஆபரணமாய்த் திகழுகிறான் ஆழியான். அமலனுக்கு அழகூட்டுவது மட்டுமின்றி அவனுக்கு ஆயுதமாயும் ஆகிறான். ஆசை வழுவாது ஏத்தி இன்புறவரும் அன்பர்கள் கண்ணுக்கு விருந்தாய்க் காண்கிற அவனே, எம்பெருமானுடன் எதிரம்பு கோர்த்து நிற்குமவர்களுக்குக் காலனுமாகிறான். காட்டுக்குப் போவேண்டிய அவசியம் இராமானுக்கேயாய் இருக்கும்போது இலக்குவன் முற்படப் புறப்பட்டாப் போலே எம்பெருமான் திருவுளத்தை அடியொற்றி அவன் ஸங்கல்பத்தை அமுலாக்குவதில் அவனுக்கு முன்பே செயல்படுவான். "ஹேதிராஜன்" என்கிற திருநாமம் பூண்டவனாதலால் திவ்யாயுதங்களுக்கெல்லாம் தலைவனாயிருந்து எஜமானன் கருதுமுன்பு பொருதுபுரிகின்ற பான்மையோன். தன் தலைவனுக்கு எதிரில் தலைவன் என்று சொல்கிறவன் தலையைக் கொய்வதில் தலையானவன். இராவணன் முடி பத்துடன் பெருமான் திருமுன்பு நின்று விடுவனோ என்கிற எண்ணத்தில் அரக்கன் முடிகளை வீழ்த்தவேண்டி, தன்னுடைய ஏவலாளிகள் பலரிருக்க மஹாராஜாவான சுக்ரீவன் அன்று பாய்ந்துப் புறப்பட்டாப்போலே, மூவுலகிலும் தனியரசு செலுத்துவதில் பெருமாள் தவிர வேறொருவன் திளைத்து நிற்பதைக் காணச்சகியான். எம்பெருமானுக்கு யாராலும் பயமில்லை என்பது உறுதியென்று தெரிந்தும் அவனுக்கொரு குறை கூடாது என்று பல்லாண்டு பலர் பாடுகிற போது உண்மையாகப் பயம் ஏற்படக் காரணங்களைக் கண்டால் குதித்தெழுந்து அவைகளை வேருடன் களைந்து வெற்றியுடன் விமலனை அணுகி நிற்பான் ஆழியான். இவைகளை விளக்கித் தரும் சில சுவையான கதைகளையும் அவைகளை அனுசந்திக்கும் ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களையும் சிறிது அனுபவிப்போம்.

**பௌண்ட்ரக வாஸுதேவனை அழித்தல்**

பௌண்ட்ரக வாஸுதேவன் என்றொரு அரசன் இருந்தான். அவனைச் சுற்றிருந்த சில அறிவிலிகள் அவனை 'நீயே வாஸுதேவன்' என்று புகழத் தலைப்பட்டார்கள். அதனால் தன்னை வாஸுதேவனாகவே நினைத்து ஆணவங்கொண்டு ஆர்த்தெழுந்தான். வாஸுதேவனைப் போல திருவாழி, திருச்சங்கு முதலியன தரித்துக்கொண்டது மட்டுமின்றி உண்மை வாஸுதேவனான கண்ணனுக்கு ஒரு ஆள் அனுப்பி இனிமேல் வாசுதேவன் என்பான் தானேயென்றும், ஆகையால் சங்கு சக்கரம் முதலியவைகளைக்

கண்ணன் தரிக்கக கூடாது என்றும சொல்லியனுப்பினான். அப்படி அணிய ஆசையுண்டானால் தன்னோடு சமர்செய்து வெற்றி பெற்ற பிறகே அங்ஙனே அணியவேண்டுமென்று நிபந்தனையும் கூறிவிட்டான். இதனைச் செவியுற்ற கண்ணனும் கோபமுற்றுக் கருடன் மீதேறிச் சென்று அப்பௌண்ட்ரகனைக் கூராழி கொண்டு தொலைத்தான்.

**காசி நகரத்தைக் கொளுத்துதல்**

மேற்சொன்ன பௌண்ட்ரகனுக்குக் காசி அரசன் நண்பன். ஆகவே தனது நண்பனை இறப்புக்குக் காரணமாயிருந்தக் கண்ணனைக் கொல்ல போர்த் தொடுத்தான். கண்ணனும் ஒரு அம்பினால் காசி மன்னது சிரத்தைத் துணிக்க அத்தலையானது காசி நகரில் அவனது மகன் காண விழுந்தது. மகன் தனது தந்தையின் பிரிவுக்குக் காரணமான கண்ணனைத் தொலைக்க ஒரு பிசாசை சிவபெருமானது அருளால் பெற்று அதனைக் கண்ணனை நோக்கி ஏவிவிட்டான். அந்த பிசாசும் கண்ணனது இருப்பிடமான துவாரகைக்கு வந்து ஆங்குள்ளோரை பாதிக்கவும், கண்ணபிரான் கவலையுற்றான். அதுசமயம் தான் சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்தபடியால், திருவாழியானை ஏவிவிட்டான். ஆழியானும் அந்தப் பிசாசைத் துரத்திய வண்ணம் அதனையும், அதனைச் சார்ந்த கணங்களையும், காசிப்பட்டணத்தையும் இமைப் பொழுதில் தீக்கிரையாக்கி விட்டு கண்ணனருகில் வந்தான்.

**மலைகளின் கொட்டத்தை அடக்கியது**

முன்பு மலைகளுக்கு இறகுகள் இருந்தன. அதனால் பறக்கும் இயல்பு பெற்று அதனால் பல துன்பங்களை நாட்டுக்கும் நாட்டிலுள்ளோருக்கும் கொடுத்த வண்ணமிருந்தன. அதனைக் கண்ணுற்ற திருவாழியான் அவைகளின் நடமாட்டத்தைத் தடுக்க எண்ணி அதன் இறகுகளைக் களைந்து விட்டான். இதை நம்மாழ்



# “கல்கி”யாய் நீயிங்கு வா!

திரு எம் நடேசன்-உடுமலைப்பேட்டை.

துஷ்டரழித்திட நவஅவ தாரம்
எடுத்திட்ட கோட்டி றைவா—இங்கு
துஷ்டரிலை என்றோ தசாமவ தாரம்
எடுத்திட வில்லை நீ.

ஏழுமலை யதில் இத்தனை சுகமதும்
ஏனுனக் களித் திட்டார்—நின்காலடி
ஏற்றிடும் செல்வ மனைத் துமே
ஏழையின் கண்ணீர் தான்.

அலமேலு மங்கையும் உனதரு கிருந்துமே
அறிந்திட வில்லை யோநீ—இங்கு
அத்தனை மங்கையும் வாழ்ந்திடப் பணமெனும்
அரக்கனால் வாடுகின் றார்.

நொடிப் பொழுதேனும் தவறிடா துனக்கு
நேர்மை யாய்ப்பூசை யுண்டு—இங்கு
நொடிப் பொழுதிற்குள் நேர்மையை கொன்றுமே
நடிததுமே வாழுகின் றார்.

குதிரையில் ஏறியே கேடயம் வாளொடு
கல்கியின் வடி வொடுவா—உனைக்
கும்பிடும் மனிதனும் கோடியில் நின்று
குறையொடு அழுவதைப் பார்.

கோடியாய்ச் சக்தியைக் கொண்ட இறைவா
குறைநீக்க எழுந்து மேவா—இங்கு
குறைவற சொர்க்கத்தில் நிறை வாழ்வு
வாழ்ந்திட அருளவே நீயுமே வா...

வார் "உடம்பினால் குறைவில்லா உயிர்பிரிந்த மலைத்துண்டம், கிடந் தனபோல் துணி பலவா அசுரர் குழாம் துணித்துகந்த" என்று நினைவு கூறுகின்றார். அன்று முதல் மலைகள் நகருவதில்லை.

**பாணன் ஆயிரந்தோள் துணித்த வரலாறு :**

"மூவிலைவேல் கூத்தன்" என்று புகழ்படைத்த பரமசிவன் பல்நடனம் புரிகையில், மஹாபலி பரம்பரையைச் சார்ந்த வாணன் என்கிற 'அசுரன அவ்வரு நடனத்தைக் கண்டு களிக்கையில் அதற்குப் பாங்காக தன்னிரு கைகளால் மத்தளம் வாசிக்கத் தலைப்பட்டான். சிவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டு தன் நடனத்தை பெருமைப் படுததிய அவனுக்கு ஆயிரம் கரங்களையும், அளவிறந்த வலிமையோடு செல்வங்களையும் அளிதது கந்தான். அதுமட்டுமன்றி அவன் மாளிகையைச் சுற்றி நெருப்பால் அரண் அமைத்துக் கொடுத்து அதனைத் தானும் தன் தமரும் காவல் செய்யவும் உறுதியளித்தான். அவ்வண்ணமே செயல்படுத்தியுமிருந் தான்.

பாணனுக்கு "உஷா" என்ற அழகுடைப் பெண் இருந்தாள். அவள் கனவில் அழகிய ஒரு காளையைக் கணடு அவனுடைய உருவத்தை அப்படியே தன் தோழியான சித்ரலேகா என்பவளிடம் அறிவித்து அவனை அணைவதில் தனக்குள்ள ஆசையை வெளியிட்டாள். சித்ரலேகை யோக முறை அறிநதவள். அதன் சகதியால் உஷா கனவில்வந்த ஆணழகன துவாரகைவாழ் கண்ணபிரானது பேரன் அநிருத்தன என்று தெரிநது அவனை துவாரகையிலிருநது தூககி வநது உஷாவினருகில் சேர்த்திட உஷாவும் காளையடன் கூடித்திளைத் திருந்தாள்

அந்தப்புர காவலாளிகள் ஆங்கொரு ஆண்மகன் இருப்பை அறிந்து அதை அரசன் வாணனிடம் அறிவிக்க வாணன் அநிருத்தனோடு சண்டையிட்டு அவனை ஒருநாகாஸ்த்ரத்தினால் கட்டிவிட்டான். துவாரகையில் பேரனைக் காணாது இடையர்களெல்லாம் வருந்தித் தேடும் போது அதன் உண்மைக் காரணத்தை நாரதர் கண்ணனுக்கு விளக்கியருளினார். கண்ணபிரான் அதனைச் செவியுற்று சீற்றம் கொண்டார். தனது தோழனும் தொண்டனும் ஊர்தியுமான கருடனை நினைக்க அவனும் கடிதேகி கண்ணனைத் தன் தோளிலேற்றி பாணனது நகரமான சோணிதபுரம் சேர்த்தான். கூடவே அண்ணல் பலராமனும் தனது மழுவுடனும், படையுடனும் கண்ணனுக்கு உதவியாக வந்து சேர்ந்தான்.

நகரத்தைக் காவல்புரிகின்ற சிவ கணங்கள் முதலில் அவர்களை எதிர்த்தன. அவர்கள் அழிந்து போக, கண்ணன் நகரத்தை நோக்கி முன்னேறும் போது சிவனை வழிபட்டு அவனருளால் பாணன் மூன்று தலைகளும் மூன்று காலகளுமுடைய ஒரு தேவதையை பாணனுக்குதவியாக உண்டாக்கி கணணனையழிக்க ஏவிவிட்டான். கணணனும் அதே வடிவில் தானுமோர் தேவதையைத் படைத்துத் பாணனுடைய கோட்டையை முற்றுகையிடுகையில் சிவனும் அவனது புதல்வர்களான முருகனும் கணபதியும் அவன் கணங்களும் கணணனை எதிர்த்து நின்றனர்.

கணணன் ஒருவகை மாய அம்பு தன்னால சிவனுடைய சக்தியை மங்கச செய்து அவனைத் தூங்கும்படிச் செய்து தன்னுடைய திறல் வலி கொணடு கார்த்திகேயனையும் கரிமுகனையும் அகட்டி வெருட்டி திருவாழியை நினைத்தான். ஆழியான் புறபபட்டு வாணன் ஆயிரம் தோள்களை உதிரம் கொட்டக் கொட்ட அறுத்தெறிநது கொண்டிருக்கையில் வாணனுயிரையாவது "விட்டுவிடுக" என்று பரமசிவன் பரமனைத்துதிக்க கண்ணனும் நானகு கைகளோடு வாணனதுயிரை பிக்ஷாடனமூர்த்தியான ருத்திரனுககு பிச்சையாக அளித்தான். தன்வீடு வாழவரும் நங்கை உஷா தந்தையற்றவள் ஆகிவிடக்கூடாது என்கிற சுயநலமும் அதிலே இருந்தமை காண்க.

"வள்ளி கொழுநன் முதலாய
மக்களோடு முக்கணான் வெள்கி
யோட விறல் வாணன் வியன் தோள்
வானத்தைத துணித்துகந்தான்"

என்று திருமங்கை மன்னனும்,

"நேர் சரிந்தான கொடிகோழி
கொண்டான் பின்னும்
நேர் சரிந்தான் எரியும அனலோன்,
பினனும்
நேர் சரிந்தான முக்கண் மூர்த்தி
கண்டீர், அப்பன்
நேர்சரி வாணன் திண்டோள
கொண்டவனறே"

என்று நம்மாழ்வாரும் இந்நிகழ்ச்சியை அனுசந்திக்கிறார்.

**ஆழியான் அன்று ஆழியை மறைத்த கதை**

மஹாபாரதப் போரில் 13ம் நாள் அர்ஜுனன் அருமைச் செல்வன் அபிமன்யுவை அநியாயமாக துர்யோதனன உடன் பிறந்தாள் கணவன் ஜயத்ரதன் என்பான் கொன்றுவிட்டான். அதனால் வெகுண்டெழுந்த பார்ததன் ஜயத்ரதனை மறுநாள் அந்திப் பொழுதிற்குள் அழிப்பேனென்றும், அப்படி அது தவறினால் தீக்குளித்துஇறப்பதாகவும்சூளுரைப் பகர்நதான். அதனையறிநத துரியோதனன முதலானோர் ஜயத்ரதனை வெளியே காட்டாமல நிலவறையில் மறைத்துவைத்துப் பாதுகாத்து அர்ஜுனன சபதம் நிறைவேறாதபடி செய்துவிட்டார்கள். இதனையறிநத கணணன் நனறுகச் சிநதிதது ஜயத்ரதனைவெளிககொண்டுவர அப்போது ஒரு சூழ்ச்சி செய்தான. அந்தி வருமுன்பே ஆதவனை ஆழியின் உதவியால் மறைத்துவிட எங்கும் இருள் மண்டியது. சொன்னவண்ணம் செய்

யாததால் அர்ஜுனன் தீக்குளிக்கத் தயாரானான். அதனைக் களிப்போடு காணவேண்டி எக்களிப்போடு துரியோதனன் ஜயத்ரதனுடன் எதிர் நோக்கி நின்றான். அத்தருணத்தில் கண்ணன் ஆழியானை விலக்கப் பகலாயிற்று. பின் என்ன நடந்திருக்கும்? ஜயத்ரதன் தலைபோயிற்று. இந்நிகழ்ச்சியை கலியன் திருவரங்க திவ்யதேசப் பாசுரத்தில் "பண்டை நான் மறையும்" என்கிற பதிகத்தில்,

"பாழியால் மிக்க பார்த்தனுக்கருளி
பகலவன ஒளிகெட
பகலே ஆழியாலன்றங்காழியை
மறைததான்"

என்று புகழ்ந்து பாடுகிறான்.

### சிசுபாலன் சிரம் துணித்தது

பழைமைப் பகைமைக் கொண்டு எம்பெருமானுககு எதிரியாகவே பிறந்து கணணனைப் பலகாலும் பல வகையாலும் ஏசியும் பேசியும நின்றவன சிசுபாலன். சிசுபாலன் தாய், கண்ணனே அவனுக்குக் காலன என்பதை முற்றுணர்ந்தவள். மருமகனை கண்ணனை அண்டி தன் மகனின் உயிரைக் காத்துத்தர வேண்டுமென்று மன்றாடினாள். அவளுடைய ஆசையைப் புறக்கணிக்க முடியாத கண்ணன் சிசுபாலனது நூறு பிழைகளைப் பொறுப்பதாகவும, அவைகளையும் விஞ்சிய ஒரு பிழையைக் கூட தம்மால் பொறுததுக்கொள்ள இயலாது என்று திட்டவட்டமாய்ச் சொல்லிவிட்டான். தான் மணங்கொள்ள உருக்குமணியை கண்ணன் கடிமணங் கொணடதிலும, இராஜசூய வேளவியில் கணணனுக்கு முதல் மரியாதை அளித்த போதும் வெகுண்டெழுந்த சிசுபாலன், பகவானை வசை பாடவே ஒரு பிறவி எடுத்தவருங்கூட கேட்கக் கூசும்படியான கீழ்மொழிகளாலே கண்ணனை ஏசிக்கொணடே போக, ஏச்சின் எணணிக்கை நூறைத் தாண்டியதும், பொறுத்துக் கொள்ள முடியாது, நேரம் பார்த்திருக்கும் நேமியான் பாய்ந்து அவன் தலையைக் கொய்தானன்றோ! அதனால் பேறும் பெற்றான் என்பதை,

"கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே
வையும்
சேட்பாற் பழம் பகைவன் சிசுபாலன்
திருவடி
தாட் பாலடைந்த தனமை"

என்று திருவாய்மொழிப் பாசுரத்தில் ஆழ்வார் வியந்து போற்றுகிறார்.

### சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறியது

வாமனன் வடிவில் மாபலி தன் பெருவேள்வியில் எம்பெருமான் மூவடி கேட்டு நின்றான். மாபலி அதனைக் கொடுத்திட எண்ணியபோது அவனது புரோகிதரான சுக்கிராசாரியர் எம்பெருமானது வடிவழகையும் வந்தவகையையும், வாய்மொழிகளையும ஊனறிப் பார்த்து இவனுக்கு தானம் கொடாமல் இருக்க மாபலியிடம் சொல்லிய பிறகும் அவன் கேளாது தணணீர் வார்த்து தானம் செய்யத் தொடங்கிய வகையில் சுக்கிரன் மாபலியுடைய நன்மையை மனமேற்கொணடு தண்ணீர் விழுகின்ற கலத்தின் துளையிலே வண்டாக புகுந்து நீர் வரவொட்டாமல் தடுத்து நின்றான். இதனைக் கண்ணுற்ற பரமன் கையில் அணிந்திருந்த பவித்திரத்தின் (தர்ப்பப்புல்) நுனியாலே அந்தத் துளையைத் துருவியதில் சுக்கிரன் கண் போயிற்று; அடைப்பை நீக்கி வெளிவந்தான். குறளுருவில் மறைமுகமாய் வந்த பரமனது தோற்றத்தில் ஆழியான் வெளிப்படையாக உதவிசெய்ய இயலாது தர்ப்பப்புல் வடிவிலே எம்பெருமான் திருவுள்ளத்தை ஈடேற்றிவிட்டான்.

"மிகக பெருமபுகழ் மாவலிவேள்வியில்
தககதி தனறென்று தானம் விலக்கிய
சுக்கிரன கண்ணைத துருமபால்கிளறிய
சககரக் கையனே யசோ வச்சோ"

பெரியாழ்வார் பாசுரத்தில் இந்த நிகழ்ச்சி இடம் பெறுகிறது.

இப்படி இன்னும் பல கதைகளும் சீமாலிகன் எனற தோழனது செருக்கைப் பொறுககொணுது அவனது தலையைக் கொய்த ஆழியானது அருந்தொணடு,

"சீமாலிகனவனோடு தோழமை
கொளளவும் வலலாய்
சாமாறு அவனைநீ எண்ணி
சக்கரததால் தலைகொண்டாய்"

பெரியாழ்வார் திருமொழியிலே காணக்கிடக்கிறது.

இக்கதைகள் பலவற்றாலும் தேறுவதொன்றுண்டு. திருவாழியானது அவயவங்களான — உறுப்புக்களான ஜ்வாலா, நேமி, அரம், நாபி, அக்ஷம் இவை ஐந்தினோடு அவனது திருமேனி அழகையும் அல்லும் பகலும் நினைத்து துதித்து வழிபடுகிற பக்தர் குழாங்களுடைய அல்லல்களெல்லாம் தீயினில் தூசாகும் என்கிற கணக்கில் அறவே பொசுக்கப்பட்டு, கண்டார் வணங்கக் களியானை மீது கடல்சூழ் உலகுக்கு ஒரு காவலரென இம்மை, மறுமை, பெருமைகளெல்லாம் குறையற அனுபவித்துப் பினபு ஆழியானது அருட்துணையுடனே அமலனருகில் அனவரதமும இன்பமெய்தி நிற்பர் என்பது உறுதி.

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள் அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுககுகளுககுச் சனமானத தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்படடவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும்; இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரணடு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினுல், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# குலசேகரர் பேணிய மன்னார் கோயில்



ஆலய வாயிலில் நம்மை வரவேற்பது பந்தல் மண்டபம் என்று அழைக்கப்படும் பெரிய மண்டபம். மண்டபத்தை அடுத்து அழகு மிகும் சிற்பங்கள் நிறைந்த ஐந்துநிலை கோபுரம் பிரதான வாயிலுக்கு அணி செய்கிறது. பிரதான வாயிலையும் சில மண்டபங்களையும் கடந்தால் கருவறையை அடையலாம். மூலவர் வேதநாராயணன் ஸ்ரீதேவி பூதேவி பிருகு மார்க்கண்டேய மகரிஷிகள் சூழ, நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். கருவறையின் தென் வடபுறச் சுவர்களில் சிவன், பிரம்மா ஆகியோர் சித்திரவடிவில் அமைக்கப்பட்டுள்ளனர். இவ்வுருவங்கள் முழுவதும் சுதையால் செய்யப்பட்டுள்ளன. வேதநாராயணன், வேதவல்லி புவனவல்லித் தாயார்களுடன் உற்சவராகவும் காட்சியளிக்கிறார்.

திரு. எம். ராஜகோபாலன் எம்.ஏ.,
சென்னை-41.

"கொல்லியலும் பனைத்தாளைக் கொற்ற ஒள்வாள கோழியர் கோன் குடைக் குலசேகரன்" என்ற புகழ் மொழிக்கேற்ப சேர, சோழ, பாண்டியர்களை அடக்கி ஒரு குடைக்கீழ் அரசாண்ட குலசேகரர், திருமால் மீது ஆறாக் காதல் கொண்டு பல பாசுரங்களைப் பாடினார். பற்பல தலங்களைத் தரிசித்த அவ்வாழ்வாருக்குத் தென் பொதிகையில் எழும் தண் பொருநை ஆன தாமிரபரணி, கருணை ஆகிய ஆறுகளுக்கு நடுவே தீவு போல அமைந்த தலம் திருவரங்கத்தை நினைவூட்டியதால் தன் இறுதி நாட்களை அங்கேயே கழித்தார். இத்தலமே இன்று மன்னார் கோயில் என வழங்கப்படுகிறது.

மன்னார்கோயில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள அம்பாசமுத்திரம் எனும் ஊரிலிருந்து தென்காசி செல்லும் பாதையில் சுமார் இரண்டு கல் தொலைவிலுள்ளது. பிரதான சாலையிலிருந்து உள்ளே சிறிது தூரம் சென்றால் இக்கோயிலை அடையலாம். மன்னார் கோயில் வழியாக விக்கிரமசிங்கபுரம் செல்லும் நகரப் பேருந்துகளும் உள்ளன; இத்தலத்தின் அருகிலே உள்ள பிரம்மதேசம், திருவாலீசுரம் ஆகிய ஊர்களில் உள்ள ஆலயங்கள் அழகிய சிற்பக் கருவூலங்களாகத் திகழ்கின்றன.

மகாமண்டபம் குலசேகரமண்டபம் என்ற பெயருடன், ஒரு உள் மண்டபத்தையும் விசுவநாதன் பீடம் என்ற வேதிகையையும் உள்ளடக்கியதாய் விளங்குகின்றது. இதில் ராஜகோபால ஸ்வாமியும், கருடன், ஆண்டாள் ஆகியோரும் குலசேகர ஆழ்வாரின் உற்சவ மூர்த்தியும் உள்ளனர்.

ஸ்ரீ வேதநாராயணன் நின்ற, இருந்த, கிடந்த ஆகிய மூன்று திருக்கோலங்களில் சேவை சாதிக்கும் மூன்று அடுக்குகளுடன் கூடிய விமானத்தை இவ்வாலயம் கொண்டுள்ளது; இவ்விமானம் "அஷ்டாங்க விமானம்" எனப்படும். விமானச் சுற்றுப்புற' உட்புறச் சுவர்களில்

பெருமானின் பல அவதாரக் கோலங்கள் வண்ணத்தால் அற்புதமாக வரையப்பட்டுள்ளன. வண்ணம் சற்று பொலிவிழந்து காணப்பட்டாலும் அச்சித்திரங்களின் வரைவு தெளிவாகப் புலனாகிறது.

கருவறையை அடுத்த கிளிக்குறட்டின் தென்புறத்திலுள்ள படிகள் வழியாக இரண்டாம் அடுக்கு சென்றால் அங்கு பெருமாளும் நாச்சியார்களும் அமர்ந்த கோலத்தில் அருள் பாலிக்கின்றனர். இந்தப் பரமபத நாதனைச் சுற்றியுள்ள வளைவு யானை முடுக்கு எனப்படும்.

மூன்றும் அடுக்கில் திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட பெருமாள் பிருகு, மார்க்கண்டேயர், ஸ்ரீதேவி பூதேவி ஆகியோர் சூழக் காட்சி அளிக்கிறார். இந்த அடுக்கைச் சுற்றியுள்ள வளைவு பூனைமுடுக்கு எனப்படும்.

ஆலயத்தில் புவனவல்லித் தாயாரின் தனிச் சன்னிதியும் அதனை அடுத்து விஷ்வக்சேனரின் அழகிய சன்னிதியும் உள்ளன. கொடி மண்டபத்தை அடுத்த வெளிப் பிரகாரத்தில் குலசேகரரின் பள்ளிப் படைக் கோயில் சிறப்பாக அமைந்துள்ளது. கூப்பிய கரத்துடன் காட்சியளிக்கும் இவ்வாழ்வாருக்குத் தனிக் கோயில், தனிக் கொடிமரம், தனித் தேர் ஆகியன உண்டு. இங்கு மூலவரின் உருவம் மட்டுமின்றி உற்சவ மூர்த்திகளும் உள்ளன. மாசிப் புனர்பூசத்தில் அவதரித்த இச்சேரலர் கோனுக்குப் பிரம்மோற்சவமும் கடந்த நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு வரை தேர்த் திருவிழாவும் நடைபெற்றதற்குச் சான்றுகள் உள்ளன.

''மாசிப் புனர்பூசம் காண்மினின்று
மண்ணுலகீர்
தேச இத்திவசத்திற்கு ஏது என்னில்-
பேசுகின்றேன்
கொல்லி நகர்க் கோன் குலசேகரன்
பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்''
(உபதேசரத்தின மாலை)

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாள் நாச்சியாருக்கு நடைபெற்றது போலவே இத்தலத்திலும் குலசேகர ஆழ்வாருக்குத் திருவிழாக்கள் நடைபெற்றன போலும். ஆழ்வாருக்குத் தினசரி பூஜை சிறப்பாக நடைபெறுகிறது. வைகுண்ட ஏகாதசித் திருநாளன்று சொர்க்கவாசல் திறக்கப் பட்டவுடன் பெருமாளையும் குலசேகர ஆழ்வாரையும் ஒன்றாகச் சேவிப்பதைப் பெரும் பேறாகக் கருதும் அடியவர் குழாம் திரள் திரளாக வருவதுண்டு. இத்தலத்தில் தெப்போற்சவமும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டதற்குக் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன.

குலசேகரர் திருவேங்கடவனிடத்தும் அரங்கநாதனிடத்தும் தீராக் காதல் கொண்டவர். திருவேங்கட மலையில் மீனாய், குருகாய், நாரையாய், செண்பகமாய், படியாகப் பிறக்கவே விரும்பினாரேயன்றி நிலையற்ற செல்வத்தை விரும்பவில்லை. இராமகாதையைப் பற்றிய சொற்பொழிவைக் கேட்டுக்கொண்டிருக்கையில் இராமன் கரன், தூஷணன், திரிசிரன் ஆகிய அரக்கர்களுடன் தனியாகப் போர் புரியச் செல்வதை அறிந்து உணர்ச்சிவசப்பட்ட ஆழ்வார், இராமனுக்குத் துணையாகப் போரிடத் தன் சேனையை எழுமாறு ஆணையிட்டாராம். மந்திரிமார்கள் அரசருக்குச் சொந்தமான விலையுயர்ந்த ஆரத்தை ஒளித்துவிட்டு வைணவர்களே அதைத் திருடினர் என்று குற்றம் சுமத்தினர். வைணவர்களின் பொருட்டு நச்சரவம் உள்ள குடத்தில் தன் கையை விட்டு அவர்கள் மீதிருந்த பழியைத் துடைத்தார் ஆழ்வார்.

''ஆரம் கெடப் பரன் அன்பர்
கொள்ளார் என்று அவர்களுக்கே
வாரம் கொடு குடப்பாம்பில்
கையிட்டவன்—மாற்றலரை
வீரம் கெடுத்த செங்கோல் கொல்லி
காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர்
சிகாமணியே''

அரசகுலத்தைச் சேர்ந்த குலசேகரரின் ஆராதனை மூர்த்திகளான ராஜகோபாலனையும் சக்கரவர்த்தித் திருமகனையும் ஆலயத்தில் எழுந்தருளச் செய்வதை அர்ச்சகர்கள் விரும்பவில்லை. குலசேகரரின் பிரார்த்தனைக்குச் செவி செலுத்திய இறைவன் அம் மூர்த்திகளை ஆலயத்தில் எழுந்தருளச் செய்தான். இவை இன்றும் மன்னார் கோவில் ஆலயத்தில் உள்ளன.

தன்மை பொருந்திய திங்களைக் கண்டு மலராமல் வெம்மை நிரம்பிய ஆதவனைக் கண்டு தாமரை மலர் மலரும்; தன் துயரை நீக்காவிட்டாலும் பெருமாளின் புகழைப் பாட தாம் மறப்பதில்லை என்று ஆழ்வார் இயம்புகிறார்.

''செந்தழலே வந்து அழலைச்
செய்திடினும் செங்கமலம்
சுந்தரம் சேர் வெம் கதிரோற்கு
அல்லால் அலராவால்;
வெம்துயர் வீட்டாவிடினும் வித்துவக்
கோட்டு அம்மானே! உன்
அந்தம் இல சீர்க்கு அல்லால் அகம்
குழைய மாட்டேனே''

நடுக்கடலத்தில் அகப்பட்ட பறவை, செல்லும் வழி தெரியாமல் அக்கலத்திற்கே திரும்புவது போலவே, தானும் எங்குச் சென்றாலும் முடிவில் இறைவனின் பாத கமலத்தையே நாடுவதாகச் செப்புகிறார்.

''வெண்கண் திண்களிறு அடர்த்தாய்
வித்துவக் கோட்டம்மானே!
எங்குப் போய் உய்கேன் உன்
இணையடியே அடையல் அல்லால்
எங்கும் போய்க்கரை காணாது எறிகடல்
வாய்மீண்டேயும்
வங்கத்தில் கூம்பேறும் மாப்பறவை
போன்றேனே''

இத்தலத்தில் இறுதி நாட்களைக் கழித்த ஆழ்வார் தமது 67வது வயதில் பூதவுடலை நீத்து திருநாட்டுக்கு எழுந்தார். அவர் வாழ்ந்த காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முதல் பகுதி

யும் ஆகும். மன்னன் குலசேகர ஆழ்வாருடன் தொடர்புடையதால் இத்தலம் மன்னர் கோயில் என்ற பெயர் பெற்று, பின்னர் மன்னார் கோயில் எனத் திரிந்திருக்கலாம்.

இந்த ஆலயத்தில் உடையவர், மணவாள முனிகள் ஆகியோருக்குத் தனிச் சந்நிதிகள் உள்ளன. தூண்களில் இராமன், சீதை, அனுமன் இளைய பிராட்டியார், ஒரு வேடன் (குகன்)? ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன. மேலும் கிளி பழத்தைக் கொத்துவது போன்ற சிற்பமும்,ஒரு மங்கை முலைப்பாலால் தீபம் ஏற்றுவது போன்ற சிற்பமும் நல்ல கலை விருந்தாகக் காட்சியளிக்கின்றன. கருவறைக்கு வெளியே உள்ள துவாரபாலகரின் சிற்பத்தின் கை கால்களில் நரம்பு, தசை ஆகியன நன்கு தெரியும் வண்ணம் தத்ரூபமாக வடிக்கப்பட்டு உள்ளது. வாலி சிவலிங்கத்தைப் பூசிப்பது போன்ற உருவம் கோபுரத்தில் காணப்படுகிறது.

**புராணச் செய்திகள்:**

அசுரர்களுக்கு அடைக்கலம் அளித்த குற்றத்திற்காக பிருகு முனிவரின் பத்தினியான கியாதி என்பவள் நாராயணனால் சிரச்சேதம் செய்யப்படுகிறாள். துயருற்ற பிருகு முனிவரும் தன்னைப் போலவே நாராயணனும் மனைவியைப் பிரிந்து அல்லுறுமாறு சாபமிட்டுவிட்டுப் பின்னர் வருந்துகின்றார். அவ்வாறே இராமாவதாரத்தில் சீதையைப் பிரிந்து அல்லலுற்ற திருமால் இராவணவதத்திற்குப் பின்னர் பிருகு முனிவர்க்கு இத்தலத்தில் வேத நாராயணனாகக் காட்சியளிக்கிறார். பெருமானை அக்கோலத்திலே பிரதிஷ்டை செய்த பிருகு முனிவரும் தன் பேரர் மார்க்கண்டேயருடன் இத்தலத்திலேயே தங்கி விடுகிறார். இலங்கை செல்லும் வழியில் வீடணனும் வேதநாராயணனைச் சேவித்த பின் இங்கேயே தங்கி விட, பின்னர் வந்த மாலியவான் வீடணனைத் தேற்றி இலங்கைக்கு அழைத்துச் செல்கிறான்.

இத்தலம் ஆதியில் வேதநாராயணபுரம் என்றே அழைக்கப்பட்டிருந்தது. சோழர் காலத்தில் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பகுதியாக இருந்தது. முதலாம் இராஜேந்திர சோழனின் மகன் சுந்தரசோழ பாண்டியன் சோழநாட்டின் அரசாங்க அலுவலராக மதுரையில் பணிபுரிந்து கொண்டிருந்த போது, அவனது ஆணையின் பேரில் ராஜசிம்மன் எனும் சேர சிற்றரசனால் இவ்வாலயம் கட்டப்பட்டு இராஜேந்திர விண்ணகரம் என அழைக்கப் பெற்றது. பின்னர் ஆட்சி புரிந்த பாண்டியர், நாயக்கர் ஆகியோரின் காலங்களில் நிலங்கள் தானமாக விடப்பட்டன. நாயக்கர்களின் காலத்தில் பல மண்டபங்கள் கட்டப்பட்டு ஆலயம் விரிவாக்கப்பட்டது. இதற்குச் சான்றாக இவ்வாலய மண்டபங்களில் திருமலை நாயக்கர், குமார கிருஷ்ண நாயக்கர், முத்துக் கிருஷ்ண நாயக்கர், தளவாய் இராமப்பையன் ஆகியோரது சிலைகள் உள்ளன. பந்தல் மண்டபத்தின் முகட்டிலுள்ள மீன் சின்னத்தைக் காணும் போது, இம்மண்டபத்தை நாயக்கரின் ஆட்சிக்குட்பட்ட ஒரு பாண்டிய சிற்றரசன் கட்டியிருக்கலாம் என்று ஊகிக்க முடிகிறது.

இவ்வாறு புராண, புராதன, கலைச் சிறப்புக்களைப் பெற்று, முன்பு அன்ன சாலையாக, அறச்சாலையாக, கல்விச் சாலையாகத் திகழ்ந்த இக்கோயில் தற்போது பழுதடைந்து செப்பனிட வேண்டிய நிலையிலுள்ளது. அதற்காகவும் ஒரு திருப்பணிக்குழு அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் சீரும் சிறப்பும் பெற்று பழைய நிலையை அடைய ஒத்துழைப்பது ஆத்திக அன்பர்களின் கடமையாகும்.



**சோமநாதபுரம் (மைசூர்) கேசவஸ்வாமிகோயில். கி. பி. 1268-ல் கட்டப்பட்டது. ஹொய்சல மன்னர்களின் சிற்பக்கலை கொண்டது. மல்லிதம்ம என்ற தலைமைச் சிற்பியின் கைவண்ணம் மிளிர்வது.**

**திரு. எஸ். ஜி. சேஷகிரி, கோவை.**



# மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீஸ்வரர் கோயில்

## பூர்வீக வரலாறு :

சென்னை மாகாணததுக்கு முக்கிய பட்டணமாய் விளங்கும் இச் சென்னை மாநகர், தற்காலத்தில் வெகு விசாலமான ஒரு பட்டணமாக நிலைபெற்றிருப்பது எல்லோரும் அறிந்ததே! அது எப்பொழுதும் இப்படியே இருந்ததா? என்பதைத்துருவி ஆராய்ந்தால் மூன்று, நான்கு நூற்ண்டுகளுக்கு முன்புதான் சற்றேறக் குறைய இவ்வளவு விரிவு பெற்றதென்றும், பல ஆண்டுகளுக்கு முன் வேறு வேறான இரண்டு சிறுநகரங்களும், எட்டு பத்து கடற்கரைக் கிராமங்களுமாக அது இருந்ததென்றும், இப்பொழுதும் ஊகித்தறிய இடமுண்டு.

இந்நகரங்களில் ஒன்று அடையாறு நாட்டுக்குட்பட்ட 'மயிலை' அல்லது 'மயிலாப்பூர்' என்னும் பட்டணம், மற்றொன்று அதற்குப் பத்து மைல் வடக்கேயுள்ள 'திருவொற்றியூர்' என்பதாகும். இவ்விரு பட்டணங்களுக்கும் இவ்வளவு மேன்மை எவ்வாறு ஏற்பட்டதென்றால், இவ்வூர்களில் இப்பொழுதுள்ள பெரிய ஆலயங்களால்தான் என்று துணிந்து கூறலாம்.

கிறிஸ்து காலம் தொடங்கியே இவ்வூர் இருந்ததாகச் சொல்வோருண்டு. இவவூரிலிருக்கும் பெரிய கிறிஸ்தவக் கோயில்களில் ஒன்றிரண்டும், பரங்கி மலையிலிருக்கும் மலைக் கோவிலொன்றும், கிறிஸ்துவின் நேர் சிஷ்யர் ஒருவரான ஸூஜ்யர். தாமஸ் என்பவரால் நிர்மாணிக்கப்பட்டதாகவும், அவர் காலமான பிறகு அதிலேயே அவர் அடக்கம் செய்யப்பட்டதாகவும் கூறுவர்.

---

சண்மிஷ்டை
தஞ்சாவூர்.

---

கிறிஸ்துவுக்குப் பின் எண்பதாவது வருஷத்தில் எழுதப்பட்ட புத்தகமொன்றில் இங்கெல்லாம் யாத்திரை செய்த மாலுமியொருவன் இதனை "மெலியார்பா" என்னும் அழகிய துறைமுகப் பட்டணமென்று எழுதியிருக்கிறான். அம்மாலுமிக்கு மூன்று, நான்கு தலைமுறைக்குப் பின் வந்த "தாலமி" என்பான் எழுதிய பூகோள சாஸ்திரத்திலும் இதே பெயரை 'மெலியார்பா' என்றே குறித்திருக்கிறான்.

ஆனால், அவர்கள் எழுதியிருக்கும பெயரைக் கொண்டு இதுதான் அந்த ஊர் என்று எப்படி நாம் நிச்சயமாகக் கூறலாம் என்று துருவிப் பார்க்க "மயிலாப்பூர்" என்று வழங்கும் பட்டணத்தின் பழைய பெயர் என்னவென்று ஆராய வேண்டும்.

அயல்தேசங்களிலிருந்து வியாபார நோக்கத்துடன் வந்து போகும் மனிதர்கள் சாதாரணமாக அவ்வூரில் வழங்கும் பெயரையே பெரும்பாலும் நன்கு விசாரித்து அவர்களுக்கெட்டிய மட்டும் அதைத் தங்கள் மொழிக்கு இணக்கிக் கொள்வார்களே ஒழிய புதிதாய் பெயர் கற்பிக்க மாட்டார்கள். சில வேளைகளில் தங்களால் சரிவர உச்சரிக்க முடியாத வார்த்தைகளைத் தங்கள் பாஷையில் மொழிபெயர்த்து உபயோகிப்பதுண்டு. ஆகையால், இந்தக் கிரேக்கர்கள் சொல்லியிருக்கும் பெயருக்கு சற்றேறக்குறைய சரியான தமிழ்ப் பெயர் ஒன்று இருந்திருத்தல் வேண்டும்; அப்படி உண்டா என்பதை சிறிது ஆராய்வோம்.

திருஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரத்தில் திருமயிலாப்பூர் பதிகத்தில் இவ்வூருக்கு 'மயிலை' என்றே பெயர் வழங்கி இருக்கிறது. ஆனால், அவர் காலத்திலேயேயிருந்த அப்பர் சுவாமிகள் தேவாரத்தில் "மயிலாப்பில்" என்னும் பெயர் கோயிற்புக்குத் திருத்தாண்டகம் முதற்பாட்டில், "மங்குன் மதிதவழும் மாட

வீதி மயிலாப்பிலுள்ளார்'' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

அதே மாதிரியாகத் திருவீரட்டானம் காப்புத் திருதாண்டகம் "வருநீர் வளம் பெருகும் மாநிருபமும் மயிலாப்பில் மன்னினூர்'' என்று பன்னிரண்டாம் பாட்டில் குறிப்பிடப்பட்டிருப்பது கண்கூடு.

ஆகையால், இவ்விரு பெரியாரும் விளங்கிய காலமான கிறிஸ்து சகாப்தம் ஏழாவது நூற்றூண்டு இடையில் மயிலை, மயிலாப்பு, மயிலாப்பில் என்ற பெயர்கள் இம்மயிலாப்பூருக்கு உண்டென்று நன்ருக விளங்குகிறது.

இதற்கடுத்த நூற்ருண்டுக் கடைசியிலும், அடுத்த நூற்ருண்டு முதலிலும் இருந்தவரான திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணி பாசுரத்தில் 'மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி' என்று சொல்வதனுல், அக்காலத்தில் திருவல்லிக்கேணி என்பது திருமயிலையின் ஒரு பாகமாக இருந்ததென்று தெரியவருகிறது. அதற்கடுத்த நூற்ருண்டில் பிரசுரமான "நந்திக் கலம்பகத்தில் மல்லை — மயிலை '' என்றும் தொடர்ச்சியில் "மயிலை'' என்னும் ஊர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்குப்பிற்பட்ட ஒன்றிரண்டு நூற்ருண்டுகளின் சிலா சாஸனங்களில் "மயிலாப்பு'', "மயிலார்ப்பில்'' என்ற இரண்டு பதங்களாலும் இவ்வூர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையால் இவ்வூருக்கு "மயிலார்ப்பு'' அல்லது "மயிலாப்பில்'' என்ற பெயர்கள் கிறிஸ்து சகாப்தம் முதல் பத்து நூற்ருண்டுகளில் வழங்கி வந்ததாக ஊகிக்கலாம்.

"மயிலார்ப்பு'' என்ற பெயரை ஒரு கிரேக்க தேசத்திய மாலுமிக்கு யாரேனும் ஒருவர் சொன்னுல், அவன் அதை கிரேக்க பாஷைக் கிணங்க "மயிலார்ப்பான்'' என்று எழுதிக்கொள்வது சகஜம்; ஆகையால் "மயிலார்ப்பு'' என்ற பெயரிருந்துதான் தற்காலத்திய 'மயிலாப்பூர்' (Mylapore) என்ற அழகிய பெயர் பிறந்திருக்கவேண்டுமென்பது வெள்ளிடைமலை!

இப்பெயர் அதற்கு ஏன்? வந்தது என்று துருவி ஆராய்ந்தால், இந்த ஊரைச் சுற்றிலும் செழித்து வானுற ஓங்கிய மரங்களும், அடர்ந்த சோலைகளும் இருந்ததினுல் அவைகளில் மயில்கள் ஆடுவதும், குயில்கள் பாடுவதும் இயற்கையான செயல்களாக விளங்கி வந்தன போலும். அதனுல் இவ்வூருக்கு "மயிலார்ப்பு'' என்ற பெயர் கொடுக்கப்பட்டதாகச் சொல்லலாம்.

அதுவுமல்லாமல் இதைச் சுற்றிலும் உள்ள கிராமங்களுக்கு இவ்வாருன பெயர்கள் பெரும்பாலும் கொடுக்கப்பட்டனவென்பதைச் சேப்பாக்கம், புரசைபாக்கம், வேப்பேரி முதலான பெயர்களாலும் எளிதில் ஒருவாறு அறியலாம்.

இந்த நாடானது, சென்னப்பட்டணத்துக்கருகாமையில் சற்று வடக்கிலிருக்கும் "புழல்'' என்னும் ஊரை ராஜதானியாகப் படைத்த "தொண்டை நாடு'' என்று தோன்றுகிறது. இது ஏறக்குறைய காட்டுப் பிராந்தியமாகவும், சாகுபடியாகும் பூமி குறைச்சலாகவும், ஆடு மாடு மேய்ப்புத் தொழிலுக்கு வேண்டிய காடுகள் ஏராளமாக இருந்ததாகவும், வழிப்போக்கர்களுக்கு கள்ளர் பயமும், விலங்குகள்பயமும் அதிகமாய் இருந்ததாகவும், இருபத்து நான்கு சிறு கோட்டைகளையுடையதாகவும் கூறுவர்.

இந்நாட்டைத் தன் வயப்படுத்திக் கொண்டு காடுவெட்டி நாடாக்கிக்



குளந்தொட்டு வளம் பெருக்கி நாடெல்லாம் பயிர் பெற்று நாகரீகம் அடையச் செய்தவன் பெரிய திருமாவளத்தான் சோழன் கரிகாலன் என்பர். இதற்குப் பிறகு சோழ ராஜ்யத்தின் கீழேயே தொண்டைமான் இளந்திரையன் ஆட்சியிலும் இந்த நாடு உட்பட்டிருந்தது. இந் நாட்களில் தொண்டை நாட்டின் கடற்கரைப் பட்டினங்களில் இது சிறந்த பட்டணமாக இருந்தது. மூன்றாவது நூற்றாண்டு ஆரம்பத்தில் பல்லவ ராஜ்யம் காஞ்சிபுரத்தில் நிலை பெற்ற பொழுது இந்நாடு அவர் வசப்பட்டது: நான்காம் நூற்றாண்டு ஆரம்ப முதல் பத்தாம் நூற்றாண்டு வரையில் பல்லவ ஆட்சி அதிகரித்துத் தமிழ் நாட்டில் பெயர் பெற்ற மும்முடி வேந்தரையும் கீழ்ப்படுத்தி ''தரை ராஜ்ய பல்லவர்'' என்று பெயர் வாய்ந்த பல்லவர்கள் ஆட்சிக்கடங்கியிருந்தது. இக்காலத்திலெல்லாம் தொண்டை நாட்டுக் கடற்கரைப் பட்டிணங்களில் மல்லை அல்லது மாமல்லபுரம் என்கிற துறைமுகப் பட்டினத்திற்குச் சமான நிலையில் விளங்கி நின்றது; இவ்வூரிலுள்ள கோயில்களும் குளங்களும் தொண்டைமான் ராஜாக்களால் பெருக்கவும், விளக்கவும் பெற்றுச் சிறப்பு வாய்ந்தன என்பதைத் திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணிபத்திலும், நந்திக்கலம்பகத்திலும் பரக்கக் காணலாம்.

வணிகர்கள் நிரம்பிய ஊராகயிருந்து வணிகத்தின் மேன்மை பெற்றது என்பதை நமக்குக் கிடைத்த கல்வெட்டு முதலான சாஸனங்களால் எளிதில் அறியலாம். மேலும், வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் பெற்ற பெருமை இம்மயிலாப்பூருக்குண்டு.

''வால்வளை உலாவும் வீதி மயிலை வள்ளுவன்'' என்ற ஒரு பழைய பாட்டு திருவள்ளுவர் மயிலையில் வாழ்ந்ததாகக் கூறுகிறது. இதற்குச் சான்றாக இன்றும் மயிலையில் ஓர் ஆலயம் இருந்து வருவது வெளிப்படை! இதைத் தற்சமயம் நன்கு புதுப்பித்துள்ளனர். வள்ளுவரை ஆதரித்த ஏலேல சிங்கர் என்பார் பல மரக்கலங்கள் வைத்து, கடல் வாணிபம் நடத்தி வந்ததாகவும் கூறப்படுகிறது.

மயிலையை ''பழம்புகழ் வாய்ந்த மயிலாபூரி'' என்றும், ''ஆழிசூழ் மயிலாபுரித் திருநகர்'' என்றும், ''பன்னு தொல் புகழ்த் திருமயிலாபூரிப்பதி'' என்றும், ''காயல் சூழ் கரைக்கடல் மயிலாபுரி'' என்றும் ''மாடம் ஓங்கிய மயிலை மாநகர்'' என்றும், ''மருவாரும் வலர்ச்சோலை மயிலாப்பூர்'' என்றும் பெரிய புராணத்துள் சேக்கிழார் பெருமானால் திருமயிலைப் பாராட்டப்பட்டுள்ளது.

## திருக்கோயிலின் பெருமையும் திருத்தலத்தின் மகிமையும்:

திருமயிலை என்னும் இத்திருத்தலம் மாகாணத்தின் தலைநகராகிய சென்னையில், கடற்கரையையடுத்துத் தென்கிழக்குப் பக்கத்தில் அமைந்துள்ளது. சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து மோட்டாரிலும் ரிக்ஷாக்களிலும் கோயிலுக்கு வெகு சமீபத்தில் போய்ச் சேரலாம். திருக்கைலாச மலையில் வீற்றிருந்தருளும் பரமேஸ்வரன் மக்கள் மகிழும்படி எக்காலமும் வீற்றிருந்தருளும் தலமாகும்; இம்மயிலைநகர், தொண்டை நாட்டில் பாடல் பெற்ற 32 தலங்களிலும் மிகவும் பெருமை வாய்ந்தது: தவிர திருஞானசம்பந்தர். திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர்களால் பாடப்பெற்ற தலமும் ஆகும். திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதம் நிகழ்ந்த இடம் இது; இங்கு திருக்கோயில் கொண்டிருக்கும் சிவலிங்கமானது பிரம்மதேவரால் பிரதிஷ்டைசெய்யப்பட்டு பிரமனது பாபத்தைப் போக்கி கபாலீஸ்வரர் என்ற அழகிய திருநாமம் பெற்றது;

ஆலயம் கிழக்கு நோக்கி ராஜகோபுரத்துடன் காட்சியளிக்கிறது. தவிர ஆலயத்திற்குப் பின்புறமாக ஓர் அருமையான திருக்குளம் நீராழி மண்டபத்தோடு இருக்கிறது: ஆலயத்தையும் குளத்தையும் சுற்றி நான்கு எழில் வாய்ந்த மாட வீதிகள் உள்ளன. இவ்வித அமைப்போடு விளங்கும் தென்னிந்திய ஆலயங்கள் மிகச் சிலவே!

சரித்திர ஆராய்ச்சியாளர் தற்காலக் கோயில் பூர்வம் இருந்த கோயில் அல்ல என்றும் சுமார் நானூறு வருடங்களுக்கு முன் கட்டப்பட்ட புதிய கோயில் என்றும் கூறுவர்; அவர்கள் ஆராய்ச்சியின் படி பழைய கோயில் கடற்கரையோரம் இருந்ததாகவும் அது போர்த்துக்கீசியரால் அழிக்கப்பட்டன என்றும் மதிக்கப்படுகிறது.

தற்காலக் கோயில் ஆதியிலிருந்த திருமயிலைக்கோயில் அல்ல என்பதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. தற்காலக் கோயிலிலுள்ள சிற்பங்கள் எல்லாம் விஜயநகரத்து அரசர்களுடைய காலத்துக்குப் பிற்பட்டன என்பதொன்று; அன்றியும் சென்னைக்கு அருகாமையிலுள்ள திருவொற்றியூர், திருவான்மியூர் முதலிய க்ஷேத்திரங்களிலுள்ள கோயில்களில பழமையான அநேக கல்வெட்டுக்கள், சாஸனங்கள் இருக்க, தற்காலக் கோயில்களில் மட்டும் ஒரு கல்வெட்டுக் கூட இல்லாதிருப்பது பிறிதொன்று.

தவிர, கடந்த 400 வருஷங்களுக்குப் பிற்பாடு கட்டப்பட்ட கோயில்களில் கல்வெட்டுக்களே கிடையாது என்பது ஆராய்ச்சியாளர் கூறும் உண்மையாகும். இதற்குச் சான்றாக ஸ்வாமி சந்நிதி மேற்குப் பார்த்திருப்பது ஆராய்ச்சிக்குரிய அரிய விஷயமாகும்;

ஆதியில் தற்காலக் கோயிலில் இருந்தது ''கூத்தாடும் விநாயகர்'' சந்நிதியாம்; அதன் பக்கத்திலிருக்

கும் தெருவுக்குப் “பொன்னம்பல வாத்தியார் தெரு’’ என்ற பெயர் இருந்து வந்ததாக இங்குள்ள மக்கள் கூறுகிறார்கள்.

மேலும், தென்னாட்டுக் கோயில்களில்எல்லாம் பெரும்பாலும் கோயிலின் திருக்குளமானது அடியார்கள் சுத்தம் செய்து கொள்வதற்காக கோயிலின் முன்பக்கமே அமைக்கப்பட்டிருக்கும். ஆனால், மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலின் பெரிய குளமோவெனில், கோயிலுக்குப் பின்பக்கமே வெட்டப்பட்டிருப்பது கண்கூடு. இதைப் பற்றிய வரலாறொன்று ஆங்குள்ள மக்களால் கர்ண பரம்பரையாகச் சொல்லப்பட்டு வருவது யாவருமறிந்ததே! அவ்வரலாறு தெரியாதவர்க்கு நான் கூறுகிறேன்.

சுமார் நானூறு வருடங்களுக்கு முன் தற்கால“கலச மஹால்’’ என்னுமிடத்திலிருந்து ஆதிகாலம் சென்னை மாநகரை ஆண்டு வந்த மகமதிய மன்னனிடம் மயிலை நாட்டாராகிய முதலியாரொருவர் ‘துபாஷி’யாக வேலை பார்த்து வந்தாராம். அவர் தான் மயிலை கபாலீஸ்வரர் ஆலயத்தைக் கட்டினாராம்.

அதற்குக் குளமொன்று வேண்டியிருந்தபடியால் இக்கோயிலின் மேற்குப் புறத்தில் மகம்மதியர்களுடைய கல்லறைகள் மிகப் பாழடைந்திருப்பதைக் கண்டு நவாப்பிடம் பரம ரகசியமாக உத்திரவு பெற்று இரண்டு மூன்று நாட்கள் இரவில் அநேக ஆட்களைக் கொண்டு கல்லறைகளை எல்லாம் எடுத்து அப்புறப்படுத்திவிட்டு அழகிய திருக்குளமாக நீராழி மண்டபத்துடன் கட்டி விட்டாராம். இதைக்கண்ட திருவல்லிக்கேணி முகமதியர்கள் கோபமடைந்து நவாபிடம் சென்று முறையிட, அவரும் “நடந்தது நடந்துவிட்டது! அதற்கு இப்பொழுது என்ன செய்வது? ஆயினும், இன்னும் நம்முடைய உரிமைகள் பறிபோய்விடவில்லை. வருடந்தோறும் வரும் நம் முகரம் பண்டிகையின் பத்தாவது தினத்தன்று அல்லாப் பீலிகளை எல்லாம் அக்குளத்தில் தோய்க்கும் உரிமை மட்டும் நமக்கு உண்டு’’ எனச்சொல்லி அவர்களைச் சமாதானம் செய்தாராம். இதற்குச் சான்றாக இன்னும் மகமதியர் பண்டிகையான முகரத்தின் பத்தாவது நாளன்று அக்கம் பக்கத்திலுள்ள முகம்மதியர்களின் எல்லாப் பீலிகளையும் மயிலைப் பெரிய கோயிலின் குளத்தில் தோய்க்கும் பழக்கம் நடந்து வருகிறது.

மேலும் கபாலீஸ்வரர் ஆலயத்தின் பிரம்மோத்சவம் வருஷந்தோறும் மாறி மாறி வரும் மொகரம் பண்டிகைக் காலத்தில் சேர்ந்து வந்தால் கோயிலின் பிரம்மோத்சவம் மறுமாதத்திற்குத் தள்ளி வைக்கப்பட வேண்டும் என்ற நிர்ணயமும் இருந்து வருவது வெளிப்படை. தற்காலக் கோயில் நானூறு வருஷங்களுக்கு முன்புதான் கட்டப்பட்டது என்று கூறுவதனால் கபாலீஸ்வர ஆலயத்தின் மகிமையொன்றும் குறைந்துவிடாது. 1350 வருடங்களுக்கு முன்பாகத் திருஞான சம்பந்தர் பதிகம் பாடிய பழைய கோவிலொன்று நிச்சயம் இருந்திருக்க வேண்டும் எனத் துணிந்து கூறலாம். திருத்தொண்டத் தொகை, வாயிலார் நாயனாரைப் பற்றிப் பாடும் போது “தொன்மயிலை வாயிலார் நாயனார்க்கும் அடியேன்’’ என்று சுந்தர சுவாமிகள் கூறியிருப்பது கவனிக்கற்பாலது. அவர்காலத்திலேயே மயிலாப்பூர் பழைய சிவஸ்தலமாக விளங்கி இருந்ததென்பது இதனால் நன்கு விளங்கும். புராதனக் கோயில் தற்காலத்திலிருக்கும் சாந்தோம் மாதா கோயில் இருக்கும் இடத்திலோ அல்லது அதனருகிலோ இருந்திருத்தல் வேண்டும். நாகப்பட்டிணம் முதல் சென்னை வரையிலிருந்த கோயில்களை எல்லாம் அழித்த போர்த்துகீசியர்கள் சாந்தோம் என்னும் பட்டிணத்தில் தங்கள் முக்கிய ஸ்தாபனத்தின் அருகிலே ஒரு ஹிந்து ஆலயத்தை விட்டிருக்க மாட்டார்கள் என்பது திண்ணம். மேற்கூறிய இடத்தில் ஒரு பழைய ஆலயம் இருந்தது என்பதற்கு ஒரு முக்கியமான ஆதாரமும் உண்டு. அதாவது ஏறக்குறைய எழுபத்தைந்து வருடங்களுக்கு முன்பாக மயிலாப்பூருக்கு எதிரிலிருக்கும் கடற்கரை சற்றே உள் வாங்கிய போது அங்கு பல சிவாலயத்திற்குரிய கற்தூண்கள் கண்டெடுக்கப்பட்டனவாம். இவைகளை அக்காலத்தில் பலர் பார்த்திருக்கலாம். பார்த்தவர்கள் பழைய கோயிலின் உடைக்கப்பட்ட துண்டங்களே என்று சிந்திக்க இடமுண்டு. இது நன்கு ஆராய வேண்டிய விஷயமென்று சொல்வாருளர்.

உமாதேவி மயிலுருக் கொண்டு தவம் புரிந்து அருள் பெற்ற தலமாதல்பற்றி “மயிலை’’என்று பெயர் உண்டாயிற்று என தலபுராணம் கூறும். மேலும், கபாலீஸ்வரர் உமாதேவிக்குக் காட்சியளித்துத் திருமணம் செய்து கொண்ட இடமும் இதுவேயாம். உமாதேவியார் இங்கே கற்பகவல்லி என்ற திருநாமத்துடன் எழுந்தருளியிருக்கிறாள். மிக்க வரப்பிரசாதி என்பது பிரசித்தம். மக்கள் நாடோறும் இங்குத் திரண்டு கூடுவர்.

வைணவ ஆழ்வார்களுள் ஒருவராகிய பேயாழ்வார் என்பவர் மயிலையில் பிறந்து வாழ்ந்து வந்ததாகக் கூறுவர். பிற மதங்களுள் சுழன்று திரிந்து கொண்டிருந்த திருமழிசைப் பிரானை இவரே பணிகொண்டு வைணவராக்கினார். பேயாழ்வார் பிறந்த இடம் இப்பொழுது ஆண்டர்ஸன் தெருவில் இருக்கிற ஒரு மண்டபமாகும். அங்கேயுள்ள கேணியிலே அவர் அயோநிஜராய் பிறந்தார் எனக்கூறுவோருமுளர். பேயாழ்வாருக்கும் திருமழிசையாழ்வாருக்கும் இப்போது மயிலாப்பூர் சித்திரக் குளத்துக்கு அருகிலுள்ள ஆதிகேசவப் பெருமான் கோயிலில் சன்னிதிகள்

உள்ளன. தவிர, அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான வாயிலார் என்பவரும், சமணர்களுடைய 22-வது தீர்த்தங்கரராகிய நேமி நாதர் என்பவரும் மயிலையில் பிறந்து வாழ்ந்ததாகக் கூறுவர்.

நேமிநாதர் கோயில் இப்பொழுது சாந்தோம் தோமையர் கோவில் இருந்த அதே இடத்தில் இருந்ததற்கு ஆதாரங்கள் மலிந்து கிடக்கின்றன. கடல், தரையை நோக்கி முன்னால் வந்த காலத்தில் இக் கோயில் அழிந்து விட்டதாம். ஆனால் இங்குள்ள இவ்வழகிய சிலையை ஜைனர்கள் சித்தாமூருக்கு எடுத்துச் சென்று விட்டனராம். இவருடைய செப்புச் சிலைகள் வந்தவாசி தாலுகாவிலுள்ள ''இளங்காடு'' என்ற ஜைன ஆலயத்தில் வைக்கப்பட்டு, ஆராதிக்கப்படுகின்றன. இதை இன்றும் காணலாம்.

தவிர, மஸ்தான் சாகிபு என்னும் ஒரு முஸ்லீம் மகான் மயிலையில் வாழ்ந்து வேதாந்த மயமான பாடல்களைத் தமிழில் நிறையப் பாடியுள்ளார். அவைகள் இன்னும் மக்களிடையே பாடப்படுகின்றன. அப்பாடல்களில் சமரச கீர்த்தனைகள் உள்ளன. கேட்பவரின் உள்ளத்தை சிலிர்க்க வைக்கும் கருத்துக்கள் கொண்டன அப்பாடல்கள்.

சைவம், வைணவம், சமணம் என்கிற மதங்களைப்போல் கிறித்தவமும், இஸ்லாமும மயிலையில் தோன்றி வளர்நது வந்தன. ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் நடந்த கடுமையான போரில் மயிலாப்பூர் சரித்திரத்தில் பிரசித்தி பெற்றுள்ளது. கி.பி. 1780-ல் ஹைதர் அலி மயிலாப்பூரையும், திருவல்லிக்கேணியையும் சூறையாடியதாகச் சரித்திரம் கூறும்.

## இதிஹாச புராணங்களில் :

சீதா தேவியைப் பிரிந்த இராம பிரான், காட்டில் சீதையைத் தேடி அலையும் போது, ஜடாயுவினால் சீதா தேவி இராவணனால் அபகரித்துச் செல்லப்பட்டாள் என்பதைக் கேட்டு மிகவும் துக்கித்து, தன் பொருட்டு உயிர்த் துறந்த ஜடாயுக்வுக்குரிய ஈமக் கடன்களைச் செய்து, பின் பரமசிவனுக்குப் பூஜைகள் செய்தால் நம்முடைய காரியங்கள் மறுகணமே ஜெயமுண்டாகும் என்றெண்ணித் திருமயிலை வந்து கபாலீஸ்வரரை வணங்கி, ''கபாலீசரே! இலங்கைச் சென்று, இராவணனிடம் போர்த் தொடுத்து, அவன் பத்துத் தலைகளையும் கொய்து, சீதாதேவியை சிறை மீட்டு உம்மை பூஜைகள் புரிய அனுக்கிரகம் செய்ய வேண்டும்'' என்று கேட்டார். கபாலீசப் பெருமானும் அப்படியே சம்மதம் தெரிவித்ததாகவும் கூறப்படுகிறது, பின் இராமபிரான் இலங்கைச் சென்று சீதா தேவியை சிறை மீட்டு, கபாலீஸ்வரரை வணங்கி வழிபட்டதாகத் தலபுராணம் வலியுறுத்தும். இதனால் இங்கு, ஸ்ரீ வைஷ்ணவர்களும் கபாலீஸ்வரப் பெருமானை வணங்கி வழிபட்டு வருகிறது வெளிப்படை.

மயிலையில் ஏழு தீர்த்தங்கள் வரை கோயிலைச்சுற்றி உள்ளன. அவற்றில் கபாலி தீர்த்தமே மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இதனை ''சக்தி கங்கை'' என்றும் சொல்வதுண்டு.

இங்கு மாசி மாதம் நடைபெறும் பிரம்மோத்ஸவம் மிகவும் விசேஷமாகும். எட்டாவது உத்ஸவ தினமான துவாதசியன்று பிரதோஷ காலத்தில், மாலை நேரம், மனோரம்யமான தென்றலுடன் மஞ்சள் வெய்யிலில் பிரகாசிக்க கபாலீஸ்வரர் பவனி வரும் கண் கொள்ளாக் காட்சியைக் காணக் கண்கள் கோடி இருந்தாலும் போதாது.

அறுபத்து மூவர் உத்ஸவத்தன்று சிந்தாதிரிப் பேட்டையைச் சேர்ந்த சுப்பிரமணிய ஸ்வாமி, மயிலை மாட வீதியில் வலம் வருவது நீண்ட நாளைய சம்பிரதாயம். முன்னும் பின்னும் வைரத்தாலேயே இழைக்கப்பட்ட ஸ்ரீ வள்ளி தேவயானை ஸமேதராக சுப்பிரமணிய ஸ்வாமியைக் காண அன்று ஏராளமான பக்தர்கள் கூட்டம் கூடுகிறது.

மயிலை வணிக வைசிய மண்டபத்தில் சுப்பிரமணிய ஸ்வாமி எழுந்தருளுவார். அங்கு விசேஷ பூஜைகள் நடைபெறும். அன்று கபாலீஸ்வரர் பஞ்ச மூர்த்திகளுடனும், அறுபத்து மூன்று நாயன்மார்களுடனும் அலங்கார வெள்ளி விமானத்தில் எழுந்தருளுவது மிக விசேஷமாகக் கருதப்படுகிறது. அறுபத்து மூவருக்கு கபாலியின் தரிசனம் இம்மயிலையில் மட்டும்தான் நடைபெறுகிறது; வேறு கோயில்களில் இவ்வாறு நடைபெறுவதில்லை என்பது முக்கிய குறிப்பு.

திருவிழா இறுதி நாளன்று தேர்த் திருவிழா வெகு கோலாகலமாக நடைபெறுகிறது. ★

### தோட்டக்காரன

*எழுவகைத தோற்றத் திருந்துவினை யாடினதைப்*
*பழுதறவே பாராமற் பயனிழந்தேன் பூரணமே.*

- பட்டினத்தார்.

தேவே, நீ தோட்டக்காரன். நீ விதையிட்டு, வேலி கட்டி, எருப் போட்டு, நீர் பாய்ச்சி வளர்க்கும் செடி நான்.

எந்தத் தோட்டக்காரனாவது ஒரே வகைச் செடியை உண்டுபண்ணுதலில் மகிழ்ச்சியடைவதில்லை. விதவிதமான செடிகள், பல நிறமுடைய பூக்கள், வேறு வேறு சுவையுள்ள கிழங்கு, காய் கனி வகைகள் உற்பத்தியாக்குதலில் அவனுக்குப் பரம திருப்தி. சர்வேசுவரன் ஒரு நல்ல தோட்டக்காரன். எத்தனைவிதப் பாங்குடைய உயிர் வகைகளை, சிறப்பாக மக்களை அவன் படைத்திருக்கிறான்! இவையனைத்துக்கும் அவனுடைய தோட்டமாகிய பிரபஞ்சத்தில் இடமுண்டு.

# ப்ரணாமங்கள்

## ப்ரணாம உபசாரம்

ப்ராணாமம் என்றால் நமஸ்காரம் செய்வது, அதாவது பகவானை வணங்குவது என்று பொருள். வைகாநஸ ஆகமங்களில் முப்பத்திரண்டு உபசாரங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஆகம பரிபாஷையில் உபசாரத்திற்கு 'விக்ரஹம்' என்றும் 'போகம்' என்றும் சொல்வதுண்டு.

विग्रहा उपचाराश्च भोगा एकार्थ वाचका: ।

(கிலாதிகாரம்-1.)

अथातो विग्रहा:—पूजाङ्गोपचारा विग्रहा इत्युच्यन्ते ।

(காஸ்யப ஞானகாண்டம்-2.)

இந்த முப்பத்திரண்டு உபசாரங்கள் ஆறுவிதமாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. பூர்ணமாக எல்லாம் கொண்டது த்வாத்ரிம் சத் விகரஹம் என்றும் நவவிம்ஸதி (29), ஸப்த விம்ஸதி (27), த்ரயோதசம் (13), அஷ்ட விகரஹம் (8), ஷட்விக்ரஹம் (6) என்றும் ஆறுவிதங்களாம் இவைகள் பகவத் பூஜையில் அந்தந்த ஸமயத்திற்கு தகுநதபடி செய்யப்படும் உபசாரங்கள். ப்ரணாம விக்ரஹம் அதாவது ப்ரணாம உபசாரம் என்பது இந்த முப்பத்திரணடு உபசாரங்களில் ஒரு முக்கியமான உபசாரமாகும். மூன்று தொகுதிகளில்(த்வாதரிம்சத், நவவிம்சதி, தரயோதசம்) அடங்கி இருக்கிறது. உபசாரம் எனற இநத விக்ரஹ பதமும், பகவத் ஸ்வரூபமான விக்ரஹம் எனபதும் வேறு என்பதை ஸ்பஷ்டமாக மனதில நினைவு கொள்ள வேண்டும.

## ஐந்துவித ப்ரணாமங்கள்

ப்ரணாம உபசாரம் ஐந்து விதம்:

(1) மஸ்திஷ்கம் (2) ஸம்புடம் (3) ப்ரஹ்வாங்கம் (4) தண்டப்ரணாமம் (5) பஞ்சாங்கம்

प्रणामस्स्यात् नमस्कार: स तु पञ्चविध: स्मृत: ।
मस्तिष्कं संपुटं चैव प्रह्वाङ्गं दण्डसंज्ञितं ।
पञ्चाङ्गं पञ्चम प्राहु: तेषां रूपं प्रकीर्त्यते ॥

(கிலா 1)

विष्णुसूक्तेन 'मास्तष्कं संपुटं प्रह्वाङ्गं पञ्चाङ्ग दण्डगं' इति पञ्च प्रणामान् कुर्यात् ।

(விமாணார்சன கல்பம்-3)

இவைகளின் லக்ஷணம் என்ன, எப்படிச் செய்ய வேண்டும் என்பதைச் சற்றுப் பார்ப்போம்.

### 1. மஸ்திஷ்கம்



பகவானை த்யானம் செய்த வண்ணமாக தலையின் மேல் கைகளை கூப்பிக்கொண்டு (அஞ்ஜலியுடன்) வணங்கினால் இதுவே மஸ்திஷ்க ப்ரணாமமாகும். மஸ்திஷ்கம் என்ற பதத்திற்கே தலை சம்பந்தமானது என்று பொருள்.

देवं ध्यायन् मस्तकेऽञ्जलौ न्यस्ते स मस्तिष्कप्रणाम: ।

(காச். ஞா.)

चिन्तयन् मनसा देवं मस्तकेऽञ्जलिसंयुतम् ।
मस्तिष्कमितिविज्ञेय: प्रणाम: प्रथमस्स्मृत: ॥

(கிலா.)

### 2. ஸம்புட ப்ரணாமம்

ஹ்ருதயத்திற்கு நேராக கைகளை கூப்பிக்கொண்டு, உடல் நிமிர்ந்த நிலையில் பகவானை த்யானம் செய்து கொண்டு செய்யும் வணக்கத்திற்கு ஸம்புடம் என்று பெயர்.



திரு. பி. கே. ஸ்ரீநிவாசன பி எஸ்.ஸி., சென்னை-4.

हृदयेऽञ्जलिपुटे न्यस्ते स संपुट· ।

(காசி. ஞா.)

तथा ध्यायन् हृदा दैवं हृदयेऽञ्जलिसंयुतम् ।
क्रियमाणो नमस्कारः सपुटः प्रकीर्तित· ॥

(கிலா: 1)

**௩. ப்ரஹ்வாங்க ப்ரணாமம்**

உடல் சிறிது முன் பக்கமாக குனிந்து, ஹ்ருதயத்தில் கைகளை கூப்பிககொண்டு த்யானத்துடன் செய்யப்படும் நமஸ்காரம் ப்ரஹ்வாங்கம் எனப்படும்.



हृदये अञ्जलिं विन्यस्य आनतशरीरे स
प्रह्वाङ्गः ।

(காச். ஞா)

अञ्जलिं हृदये कृत्वा नतकायेन भक्तितः ।
क्रियते यो नमस्कारः प्रह्वाङ्गस्स उदाहृतः ॥

(கிலா.)

**4. தண்ட ப்ரணாமம்**

பூமியில கம்பு போல் படுத்துக கொண்டும் கைகளை நன்றாக நீட்டி அஞ்சலியுடன் அதாவது கைகளை கூப்பியவாறு நமஸ்காரம் செய்வது தண்ட ப்ரணாமமாகும்.

पादौ हस्तौ प्रसार्य अधोमुखं भूमौ दण्डवत्
शयिते स दण्डाङ्ग इति प्रणामः ।

(காச். ஞா)

शयित्वा दण्डवत् भूमौ अञ्जलिं संप्रसार्य च ।
क्रियते यो नमस्कारः उच्यते दण्डसंज्ञितः ॥

(கிலா.)

இந்த தண்ட ப்ரணாமம் முக்யமாக புருஷர்களுக்கு மிகவும் ஏறறதாககும். ஆரோக்யத்தை அளிக்கும். நன்றாக மூச்சுக் காறறு வாங்கிக் கொண்டு, அவசரப்படாமல் நிதானமாக எட்டு அல்லது பத்து எண்களுககுக் குறையாமல் தினத்திற்கு மூன்று அல்லது நான்கு வேளை செய்ய வேணடும் தேசாப்யாசமாக. ஆகாரத்திற்கு முன்புதான் செய்யவேண்டும். இவ்விதம் இதை தவறாமல் செய்தால் அஜீரணக கோளாறுகள் எதுவும் ஏறபடாது. சுறுசுறுப்பைக் கொடுக்கும். வயிற்று சம்பநதமான வியாதிகள் நீங்கி நன்றாக பசி எடுக்கும். சுவாசபபைகள, இருயம இவைகள பலபபடும். ஏனெனில் இதில் அநேக யோகாசன நிலைகள் அடங்கி இருககின்றன. ஆஸநமாவிமகு இநு ஒரு கைகணட செலவு அறற சிகித்சை. ஆனால் ஸ்த்ரீகளுக்கு ஏற்றது அல்ல.

**5. பஞ்சாங்க ப்ரணாமம்**

இது உட்கார்ந்த நிலையில் அதாவது மணடியிட்டபடி செய்யப்படும் நமஸ்காரம். இரண்டு கால்விரல்கள் இரண்டு முழந்தாள்கள், நெற்றி, (முகம் பூமியை தொங்கவிட்டுக் கொண்டபடி) ஆகிய ஐந்து அங்களும் நன்றாக பூமியில் படும்படி நமஸ்காரம் செய்தால் பஞ்சாங்க நமஸ்காரமாகும.

पादाङ्गुलिभ्यां जानुभ्यां ललाटेन च भूतलम् ।
क्रियते संस्पृशन् भक्त्या सा पञ्चाङ्ग-
नमस्क्रिया ॥ (கிலா.)

விமானார்சன கல்பத்திலும், पादाङ्गुलिभ्यां वा आसीनः साञ्जलिं भूमौ ललाटं निवध्यात् स पञ्चाङ्गः । என்று இதையே தான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் காச்யபத்தில் இதன் லக்ஷணம் சிறிது மாறுதலுடன் சொல்லபபட்டிருக்கிறது.

पाणी व्यत्यस्यैवं स्वस्ति बन्धनं कृत्वा
पादाङ्गुलिभ्यां जानुभ्यां ललाटेन चपञ्चाङ्गैः
भूमिस्पर्शने कृते स पञ्चाङ्गः ।

இதனபடி மணடியிட்டு ஸேவிககும போது கைகள் இடம் வலமாக மாறி



அதாவது வலது கைவிரல்கள் இடது பக்கமாகவும், இடது கை விரல்கள் வலது பக்கமாகவும் இருக்கவேண்டும்.



இதே மாதிரியாக ப்ரஹ்வாங்க ப்ரணாமத்தில் கைகள் ஸ்வஸ்திகமாக அதாவது இடம் வலம் மாறி இருகக வேண்டும் என்று விமானார்சன கல்பத்தில் லக்ஷணம் கூறி இருக்கிறது. இது ஒரு சிறிய வித்தியாசமே.

ஜன நெருக்கடியின் காரணமாகவோ அல்லது குறுகிய இடமாக இருந்து தேவையான ஸ்தலம் போதாமல் இருப்பதன் காரணமாக தண்டப்ரணாமம் செய்ய முடியாத சமயங்களில் இந்த பஞ்சாங்க ப்ரணாமத்தை அனுஷ்டிக்கலாம்.

முக்யமாக ஸ்த்ரீகள் இப்பஞ்சாங்க ப்ரணாமத்தையேதான் செய்ய வேண்டும். இது ஸ்திரிகளுக்கு கல்பக வ்ருக்ஷம் போன்ற ஒரு அத்புத ஸாதனம். உடலை அதாவது முதுகை நன்றாக வில் போல் வளைத்து முகம் நெற்றி நன்கு பூமியில் படியும்படி பரபரப்பில்லாமல் நிதானமாக இரண்டு கால்களையும், முழந்தாள்களையும் நன்றாக ஒன்று சேர்த்துக் கொண்டு நமஸ்காரம் செய்ய வேண்டும. இப்படி ஸ்த்ரீகள் எவ்வளவுககவ்வளவு செய்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு நல்ல பயனை தரும். இதனால் கர்பப்பை ஸம்பந்தமான உபாதைகள், மாதவிடாய காலத்தில் ஏற்படும் வயிற்று வலியும் மற்ற கோளாறுகளும் நீங்கும்; முகம் கீழ நோககி பூமியை தொடுவதால், குனிந்த இந்நிலையில் ரத்தவோட்டம் முகத்தில் நன்றாக ஏற்பட்டு கணகளும் முகமும் ப்ரகாசமடையும். இதை நன்குணர்ந்த நம் முன்னோர்கள், பெரியோர்களை நம் ஸ்த்ரீகள் நமஸ்கரிக்கும் போது, ஒவ்வொருவரையும் தனித்தனியாக சேவிக்கவேணடும் என்ற பழக்கத்தை ஏற்படுததி இருக்கிறார்கள். இது அவர்களின் நன்மைக்காகவே ஏனெனில் அதிக எணணிக்கையில் பஞ்சாங்க ப்ரணாமம் செய்து அதன் பலனாக நோயற்று ஆரோக்யத்துடன் வாழ்வதற்காகவே. அம்மாதிரியே தணடப் ப்ரணாமம் புருஷர்களுக்காகவே ஏற்படுத்தப்பட்டது. பூஜைக்காக மட்டும் அல்ல என்று நாம் தெரிந்து கொள்ள வேணடும்.

पूजारंभेऽथ मस्तिष्कं संपुटं वा प्रयोजयेत् ।
प्रणामविग्रहस्स स्यात् पूजान्ते च प्रयोजयेत्॥

(கலா.)

என்றபடி பூஜையின் ஆரம்பத்திலும் முடிவிலும் ப்ரணாம உபசாரத்தை மஸ்திஷ்கமாகவோ அல்லது ஸம்புடப்ரணாமமாகவோ செய்ய வேண்டும் என்பது ஆகம விதி.

ஆலயங்களுக்குச் சென்று ஒவ்வொரு சந்நிதியிலும், அவ்வாறே வீட்டில் ஒவ்வொரு பெரியோர்களையும் முறைப்படி அநேக ப்ரணாமங்களை செய்து, இம்மையிலும், மறுமையிலும் பயனடைவோமாக.



## திருத்தலங்களும் - திருப்பதிகளும்

சைவமும், வைஷ்ணவமும் இந்து மதத்தின் இரு கிளைகளாகும். சைவ சமயத்தை நிலை நாட்ட வந்தவர்கள் நாயன்மார்கள் என அழைக்கப்படுகின்றனர். வைஷ்ணவத்தை விளககிக் கூறியவர்கள் ஆழ்வார்களாகும். நாயன்மார்களால் பாடல் பெற்ற திருத்தலங்கள் 275 ஆகும். ஆழ்வார்களால் புகழடைந்த திருப்பதிகள் 108 உள்ளன.

| | திருத்தலங்கள | திருப்பதிகள் |
|---|---|---|
| சோழ நாட்டில் | — 191 | 70 |
| பாண்டி நாட்டில் | — 14 | 9 |
| மலை நாட்டில் | — 1 | 13 |
| தொணடை நாட்டில் | — 32 | 8 |
| வட நாட்டில் | — 5 | 8 |
| கொஙகு நாட்டில் | — 7 | — |
| நடு நாட்டில் | — 22 | — |
| துளுவ நாட்டில் | — 1 | — |
| இலஙகையில் | — 2 | — |
| | 275 | 108 |

பாண்டி நாட்டில் ஆழ்வார் திருநகரியை நடுமையமாக வைத்து நவ திருப்பதிகள் உள்ளன. வட நாட்டில் இமய மலையில் உள்ள பத்ரிநாத் என்னும் திருப்பதியும் திருக்கைலாய கிரி என்னும் திருத்தலமும் முறையே வைகுண்டமென்றும் கைலாயமென்றும் இந்துக்களால் போற்றப்படுகின்றன. தகவல்: முடிவை முத்து.

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம் | ... | 1–00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0–50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1–50 |
| ஹனுமான் | ... | 0–50 |
| கண்ணன் பேசுகிறுன் | ... | 0–50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0–10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8–00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0–15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2–50 |
| திருவேங்கட கலசம் | ... | 0–15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8–25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0–75 |
| ஹனுமன் கதை | ... | 2–00 |
| திருமலை வழி காட்டி | ... | 0–10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11–50 |
| கண்ணன் கதை | ... | 2–00 |
| நித்யானுஸந்தானம் (வடகலை) | ... | 4–00 |
| நித்யானுஸந்தானம் (தென்கலை) | ... | 4–50 |
| அபிமன்யு | ... | 2–00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2–00 |
| பகவத் கீதை | ... | 2–00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | .. | 5—00 |
| Alamel Mangapura | .. | 0—25 |
| Ekantaseva | .. | 5—00 |
| Govinda brochure | .. | 3—00 |
| History of Tirupati Vol: II | .. | 15—00 |
| Melodies of staff notation | .. | 10—00 |
| Lord Venkateswara & Alwars | .. | 1—00 |
| Acharya Hridayam | .. | 8—25 |
| Theory of Knowledge | .. | 5—00 |
| Tirupati Sri Venkateswara | .. | 40—00 |
| S V. Suprabhatham with meaning | .. | 0—50 |
| Heart of Bhagavatham | .. | 3—00 |
| S.V. Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | .. | 3—75 |
| Tiruppavai | .. | 10—00 |
| Vision of Aryan Glory | .. | 1—50 |
| Uddavageetha | .. | 5—00 |
| The Wise Minister & other stories | .. | 1—00 |
| Sree Venkateswara | .. | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | .. | 1—00 |
| Harischandra | .. | 1—00 |
| Kardama & Devahuti | .. | 1—00 |
| Maharshi Valmiki | .. | 2—00 |
| Druva | .. | 2—00 |
| Bhishma | .. | 2—00 |
| Vedavyasa | .. | 2—00 |
| Tenali Ramakrishna | .. | 2—00 |
| Ganesha | .. | 2—00 |
| Thyagaraja | .. | 2—00 |
| Drowpadi | .. | 2—00 |
| Bhageerada | .. | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | .. | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | .. | 2—00 |
| Pillai Lokacharya | .. | 2—00 |
| Dhadhichi | . | 2—00 |
| Nachikata | .. | 2—00 |
| Namadeva | .. | 2—00 |
| Garuda | .. | 2—00 |
| Ramanujacharya | .. | 2—00 |
| Narada | .. | 2—00 |
| Vedantadesikaru | .. | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | .. | 2—00 |
| History of Tirupati Vol. I | .. | 15—00 |
| Homage to Kalankari | .. | 120—00 |
| Yoga & Yoga | .. | 2—00 |
| Viswamithrudu | .. | 2—00 |
| Idle child | | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோத்ரம் | .. | 0–62 |
| எஸ்: வி. சுப்ரபாதம் | .. | 0–12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2–00 |

குறிப்பு: பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**THE WELFARE OFFICER**
**Publication Wing (Administrative Building)**
T T D TIRUPATI

*(இறைவனுக்கு இலை, மலர், கனி, நீர் இவற்றுள் எதையேனும் உள்ளன்புடன் வழங்கினாலே அவன் அடியார்களுக்கு அருள் புரிகின்றான் என்பது கண்ணன் காட்டியவழி. தவிர்க்க முடியாத சூழ்நிலையில் நியமத்தில் பிசகு எனக்கருதப்படுவதைச் செய்யும்போது கூட, அகமுருகி அதை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்து விட்டால் கடவுள் அதையும் ஏற்றுக் கொள்கின்றான். இது அவனது அளவிலாக் கருணையை எடுத்துக் காட்டுகிறது. அதோடுகூட, மனம் நைந்து பிரார்த்திக்கும் அடியவருக்காக இறைவன் எவ்வளவிற்கு இறங்கிவந்து மனளித்தருளக் காத்திருக்கிறார் என்பதற்கு அடையாளமாகவும் அது விளங்குகிறது!)*

# நைவேத்தியம்

நஞ்சுண்டேசுவரர் என்னும் திருநாமத்துடன் விளங்கும் சிவன்கோயில் உள்ள திருத்தலம் நஞ்சன்கூடு. அது ஒரு முககூடல் தலமும் கூட; அதாவது, மூன்று நதிகள் கலக்கும இடம். பிரபஞ்சத்திலுள்ள உயிர்கள் அனைத்தையும் காக்கும பொருட்டு, பாற்கடலைக் கடைந்த போது தோன்றிய கொடிய விஷத்தை உண்ட ஈசுவரன வதியும் அழகிய கோயில் அது. பல்லாண்டுகளுக்கு முன அப் பகுதியை ஓர் அரசன் ஆண்டு வந்தான். தெய்வ பக்தியும் குடிமக்களிடம் பேரன்பும் கொண்ட பெருந்தகையாளன் அவன். எப்போதும் அறம் வழுவாது ஆட்சி நடத்த வேண்டும் என்னும் ஆர்வமுள்ளவன்; அவ்வாறு நடைபெற வேண்டும் என்று இறைவனை அனுதினமும் வேண்டி வருபவன்.

ஒருநாள் வேனிற்காலத்தில் தன் பரிவாரங்களுடன் வேட்டையாடச் சென்றான. வேட்டையினால் களைப்புற்ற மன்னன அருகிலேயே இருந்த தனது சோலை ஒன்றில் இளைப்பாறும் பொருட்டுத் தங்கியிருந்தான். சோலையில் பலவகைப் பழமரங்களும் ஏராளமாக இருந்தன. அவற்றைப் பார்வையிட்டு வருகையில், அவ்வாண்டு தீஞ்சுவை மாங்கனிகள் பெருவாரியாகக் காய்த்திருப்பதைக் கண்டான். தோட்டத்தைப் பராமரிப்பவர்கள் அத்தகைய காய்ப்பு அதற்கு முன் எப்போதும இருந்ததில்லை எனத் தெரிவித்தனர். அரசனும் அனைத்தும் இறையருளின் விளைவே என்று எண்ணி, மனத்துள் கடவுளுக்கு நன்றி செலுத்தினான்.

மாலை அரண்மனைக்குத் திரும்பினான் மன்னன். தன் மனையாளிடம் தோட்டத்தில் மாம்பழங்கள் ஏராளமாகக் காய்த்திருப்பதைக் கூறி மகிழ்ந்தான. அரசியும் "அன்பரே! நீஙகள் சொல்லும் போதே நாக்கில நீர் ஊறுகிறது. உடனேயே சுவைத்துத் தின்ன வேண்டும் போலிருக்கிறது. அதற்கு ஏற்பாடு செய்கிறீர்களா?" என்று தன் மணாளனிடம் ஆசையுடன் தனது விருப்பத்தை வெளியிட்டாள். அவனும், பொழுது விடிந்ததும் அங்ஙனமே செய்யலாம் எனக்கூறி இரவு உணவிற்குப் பின் உறங்கச் சென்றான்.

"உன் தோட்டத்தில் குலைகுலையாய் மாமபழங்கள் பழுத்துக் குலுங்குகின்றனவே! உன் மனைவிக்கு மட்டும்தான் பழமா? ஆசையுடன் கேட்கும் அவளுக்குக் கொடு, வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. ஆனால் இதோ என்னைப் பார். வயது முதிர்ந்துவிட்டது. என்னால் எங்கேயும் சென்று வேலை செய்ய முடியவில்லை. ஆனால், பசியோ காதை அடைக்கிறது. உன்னிடம தானே நான் முறையிட முடியும். எனக்குப் பழம் தரமாட்டாயா?"

கனவில் கேட்ட சொற்களின் பொருள் அரசனுக்கு விளங்கவில்லை. பழத்தைக் கேட்டவர் — அந்தக் கிழவர் — யார் என்பதும் புலனாகவில்லை. இன்னமும் கனவுநிலையிலேயே இருந்தான்.

ஆனால், அது என்ன திடீரென ஓர் ஒளிவீச்சு! ஆகா, நஞ்சுண்டேசுவரர் அல்லவா காட்சி அளிக்கிறார்! மாம்பழம் கேட்டவர் அவரா! கனவு நீங்கியது.

ஆம், அரசனின் கனவில் நஞ்சுண்டேசுவரரே கிழவர் உருவில வந்தார்! அரசனுக்கு மேனி எங்கிலும் புல்லரித்தது! என்ன பேறு!

நஞ்சுண்டேசுவரரிடம் மாறாத அன்பு பூண்டிருந்த மன்னவன், அவரே வந்து விரும்பிக் கேட்ட போது பெரிதும் உவகை அடைந்தான். பொழுது புலர்ந்தது. நஞ்சுண்டேசுவரருக்கு ஆயிரம் மாம்பழம் அனுப்ப முடிவு செய்தான் அவ்வரச பகதன். ஒவ்வொரு கூடையிலும் ஐமபது பழம்; இருபது பெரிய கூடைகள். பழத்தோட்டத்திலிருந்து கோவில் நெடுந்தொலைவு. எனவே, ஒவ்வொரு கூடையையும சிவபக்தியில் சிறந்த அன்பர் சுமந்து சென்று கோவிலில் சேர்க்க வேணடும் என்று ஏற்பாடாகியது. கோவில் சேரும் வரை அவர்

திரு. ஏ. நடராஜன், திருப்பதி.

கள் நியமத்துடனும் உணவு ஏற்காதும் இருக்க வேண்டும்.

''இறையன்பர்களே! நம்மை எல்லாம காத்துவரும் நஞ்சுண்டேசுவரர் நேற்று என் கனவில் தோன்றினுர். தமக்குப் பழம் அனுப்பக் கூடாதா என்று கேட்டார். ஒரு பழம் என்ன ஆயிரம் பழம் அனுப்புகிறேன். என்னுடைய நல்லாட்சிககே காரணமாகத் திகழும் எம்பெருமானுக்கு இல்லாததா? நீங்கள் அனைவரும் எவ்வித அபசாரமும் நேராமல் பழங்களைத் திருச்சந்நிதானத்தில பத்திரமாகச் சேர்த்துவிட வேணடும் என்று விரும்புகிறேன். என் விருப்பத்தை நல்ல முறையில் நிறைவேற்றி வைக்கும்படி உங்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். பழங்களை இறைவனுக்கு நிவேதனம் செய்தது தெரிந்த பிறகே நான் உணவு உட்கொள்ள நிச்சயித்துள்ளேன்'' என்று அவர்களிடம் அரசன் கூறினுன். அவ்வன்பர்களும் அரசனின் ஆழ்ந்த பக்தியையும் இறைவனின் கருணையையும் நினைந்து, அத்தெய்வத் தொண்டில் தங்களுக்கும் ஒரு சிறு பங்கு கிடைத்ததற்காக ஆணடவனுக்கு நன்றி கூறி மகிழ்ச்சியுடன் புறப்பட்டனர்.

கடும் வெய்யில். ஆயினும் இறைவனுககுத் தொண்டு செய்கிறோம் என்னும் பெருமையுடன் அதன் திருநாமஙகளைப் பாடிக்கொண்டு அவர்கள் வழி நடந்தனர்.

ஒவ்வொரு பழக்கூடையும் நல்ல கனம். அவற்றைச் சுமந்து சென்றவர்களுடன் முதியவர் ஒருவரும் இருநதார். கடவுளுக்கு எவ்வகையிலாவது தொணடு செய்ய வேண்டும் என்னும நோக்கம் காரணமாகவே, அவா இப்பணியை மேற்கொண்டவராகத் தோன்றியது. அவரிடம் ஆர்வத்திற்குச் குறைவில்லை; ஆனுல் அவருடைய மெலிந்த உடலால் அதற்கு ஈடுகொடுக்க முடியவில்லை! மேலும், கடும் வெப்பத்தினுலும் அவர் அயர்வடைந்திருந்தார். காலையிலிருந்து பட்டினி. அவருக்குத் தளர்ச்சி மிகுந்தது. ஏனையோரின் விரைவான நடைக்கு இணையாக அவரால் நடக்க முடியவில்லை. மெலல மெல்ல அவர் பின்தங்கிச சென்றுர்.

அப்போதுதான் அவருக்கு அநத எணணம் ஏற்பட்டது. தாங்க முடியாத பசியைத் தணித்து கொள்ள ஒரு மாம்பழத்தைச் சாப்பிட்டால் என்ன! ஆயிரத்தில் ஒனறு தானே குறையப்போகிறது. அக்கருத்தே தவருனது என்று அவருக்குத் தோன்றியதோ என்னவோ உண்மை! ஆனுல் பசியின் வேதனையே வென்றது. எனினும, அப்பழத்தைப் புசிப்பதற்கு முன் ''பகவானே! நான் செய்வது ஏற்றுக் கொணட விரதத்திற்கு அபசாரம் என்பது தெரிகிறது. என்ன செய்ய? பசியோ காதை அடைககிறது; கால்கள் தடுமாறுகின்றன. இன்னும் தொலைவு செல்ல வேணடும். என்னை மன்னித்து விடப்பா. இப்பழம் உனக்கே அர்ப்பணம். ஏற்றுக்கொணடு என்னைக் கடைத்தேற்றி அருள் புரியவும்'' என்று உருகிய உள்ளத்துடன் அப்பழத்தைப் புசித்தார்.

ஊட்டம் நிறைந்த பழத்தை உணடவுடன் அவருக்குச் சற்றே தெமபு உண்டாயிற்று; எட்டி நடைபோட்டார். பிறருடன் சேர்ந்து கொண்டார். அனைவரும் கோவிலை அடைந்தனா. ஆலய அதிகாரிகள் பழக்கூடைகளைப் பெற்றுக் கொணடனர். அர்ச்சகர்கள் அவற்றை உரிய முறையில் இறைவனுக்கு நிவேதனம் செய்தனர் பழக்கூடை எடுத்து வநதவர்களுக்கும் பிரசாதம் வழங்கப்பட்டது. தகவல் அறிந்த அரசனும் ஆண்டவனுக்கு நன்றி செலுத்தி உணவு உட்கொணடான்.

இறைவனுக்கு நல்லதொரு சேவை செய்த களிப்புடன் அரசன் அன்று உறங்கினுன்.

மீண்டும் கனவு! முந்திய நாள் தோன்றிய அதே கிழவர் ''மன்னவனே! நீ அனுப்பிய மாங்கனி நிரம்பவும் சுவையுடன் இருந்தது. மன நிறைவோடு சாப்பிட்டேன். உனககு எல்லா நலங்களும உண்டாகுக!'' என்று ஆசீர்வதித்து மறைந்தார்.

விழிப்புற்ற வேநதனுக்கு ஒருபுறம மகிழ்ச்சி, நஞ்சுண்டேசுவரர் திருப்தி அடைந்ததில். ஆனுல், ''அது என்ன 'நீ அனுப்பிய மாங்கனி' என்று ஒருமையில் குறிப்பிடுகிருரே? நான் ஆயிரம் மாம்பழங்கள் அல்லவா அனுபபினேன்'' என்ற கவலையும் தோன்றியது. உணமையை அறிந்து கொள்ள விரும்பினுன்,

முதல் நாள் பழக் கூடைகளைச் சுமநது சென்றவர்கள் வரவழைக்கப் பட்டனர். அரசனே அவர்களிடம பழங்கள் சரியாகச் சேர்க்கப்பட்டனவா என்று ஒவ்வொருவராக விசாரித்தான். பழததைச் சாப்பிட்ட முதியவர் அஞ்சினுர்; ஆனல், உணமையை மறைக்க விரும்பவில்லை; எனவே, நடந்ததை அப்படியே கூறினுா. பழத்தைத் தின்பதற்கு முன அதைப் பகவதர்ப்பணம செய்ததையும் அவர் குறிக்கத் தவறவில்லை. அரசன் என்ன தணடனை கொடுப்பானே என்று பயந்தார்.

ஆனுல், அரசனே அவா கால்களில் விழுந்து அவரை வணங்கினுன்; அவரிடம சொனனுன்: ''ஐயா, நீஙகள் உணமையிலேயே பெரும பாககிய சாலி. நீங்கள் தின்ற பழமே ஆணடவன் விரும்பி ஏற்றுக்கொண்ட ஒரே பழம. எப்பொருளையும் பக்தி உணர்வுடனும் முழு மனதுடனும அகமபாவமே இலலாது அளிததால்தான அதை இறைவன ஏற்றுக் கொளவான என்னும் உணமை எனககு இபபோது தெளிவாயிறறு. நீங்கள் இஙகேயே தஙகியருளவேண்டும்.''

இறைவனின கருணையை நினைத்த கிழவரின் கணகள் பனித்தன; கைகள் சென்னிமேல் குவிந்தன.

★

# பட்டர் படைத்த பல்லாண்டு

வெண்ண வண்ணமான பூக்கள், நல்ல வாசனையைத்தரும் புஷ்பங்கள், தேனை ருசி பார்க்கும் வண்டுகள் மொய்க்கும் மலர்கள், சிறிய செடிகள், பெரிய செடிகள், துளசிச் செடிகள இவைகள்தான் வில்லிபுத்தூரில் வாழநது வந்த பட்டரின் ஆஸ்தி. கடப்பாரை, மணவெட்டி, கத்தி, ஒரு சிறிய தோட்டம் இவைகள் தான் பட்டருடைய சொத்து. தன்னுடைய தோட்டத்தில் பூக்கும் மலர்களையும் துளசியையும் கொணடு விதவிதமானமாலைகளைத்தொடுத்துத் திருமாலுக்குசசமர்ப்பிப்பார். கோவிலில் பெருமாளுக்கு சாற்றுமுறை ஆனதும், திருமாலைக்கண்டு ஆனந்திப்பார்; அழகை ரசிப்பார்; அவரை உள்ளத்தில் வைத்து வணங்குவார். இதுதான் அவர் செய்யும் தினத்

திரு எம். கே. ஸ்ரீனிவாசன், B.A.,
சென்னை - 39

தொழில். சிறந்த விஷ்ணு பகதர் என மக்கள் அவரைக் கொண்டாடினார்கள. அவரை தோட்டக்காரர் எனறும் மக்கள் அழைப்பார்கள்.

ஒரு நாள் பட்டர்பிரான் ஒருகனவு கணடார். "பட்டரே! நேரே மதுரைக்குச் செல்லவேணடும். பாணடி மன்னன் அரஙகத்துல சமயச் சொறபொழிவும், வாதங்களும நடககப் போகின்றன. அங்கே உங்களுககு வரவேற்பு கிடைக்கும. வைணவ சமயத்தைப்பறறி பல அறிவுரைகளைச்செய். பல ஆதாரஙகளை எடுத்து உரை." எனறு ஸ்ரீதிருமால் கட்டளையிட்டார்.

"மகாப்பிரபுவே! உங்கள் கட்டளை மிகவும் விநோதமாகயிருக்கிறது. நான் சாதாரண மனிதன். உங்களை மனமாரத தொழுது கொண்டு இருக்கும் ஒரு பக்தன். நான் அங்கே கூடும் சமய வல்லுநர்கள் மத்தியில் என்ன பேசமுடியும்? எனக்கு என்ன ஆதாரங்கள் தெரியும். நான் அந்த வேலைக்கு லாயக்கற்றவன்" என்றார் பட்டர்.

"நீ உடனே எழுந்திரு. அங்கே செல். எதைப்பற்றியும் கவலைப் படாதே. அங்குச் சென்றால் எல்லாம் சரிபட்டு போகும்" என்றார் திருமால்.

பட்டர்பிரான் திருமாலின் உத்திரவின்படி மன்னன் அறிவித்திருந்த அரங்கத்தை அடைந்தார். சமய விற்பன்னர்கள், மாபெரும் புலவர்கள் அங்கே உட்கார்ந்திருந்தனர். மன்னனும் பட்டர் பிரானை சந்தோஷமாக வரவேற்று ஓர் இடத்தை அளித தான். "தோட்டக்காரரும் வந்திருக்கின்றாரே! இவரால் என்ன பேச முடியும். மாலைதான் தொடுப்பாரே தவிர வைணவ சமயத்தைப்பற்றியும் சமய நீதிகளையும் எடுத்துப்பேச இவரால் முடியுமா" என்று கூறி வியந்தார்கள். சிலர் அவரைப் பார்த்த பார்வையே விநோதமாக இருந்தது.

"சமய வல்லுநர்களே! ஒவ்வொருவராக தங்கள் சமயத்தையும சமய நீதிகளையும் எடுத்துக் கூறுங்கள். ஆதாரங்களுடன் இருககவேண்டும். மற்ற சமயங்களைப் பறறிக் குறை கூறுவதும் கூடாது. தாக்குதலும்கூடாது. இநதக் கம்பத்தில் ஒரு ஆள் உயரத்தில் ஒரு பொற்குழி கட்டித்தொங்குகின்றது. யார் இந்தப் போட்டியில் சிறந்தவராகத் தேர்ந்தெடுக்கப்படுவாரோ அவருக்கு இப்பொன் பரிசாகக் கிடைக்கும்" என்று மன்னன் உரைத்தார்.

பலர் பல மதங்களைப் பற்றி பேசினார்கள். சைவ சித்தாநதங்களையும் புத்த நெறிகளையும், சமணக் கொள்கைகளையும் எடுத்துரைத்தனர். கடைசியாக விஷ்ணு பக்தர் பட்டர் எழுந்தார். வைண மதத்தைப்பற்றியும், வேதம், இதிகாச புராண ஆதாரங்களுடன் பலமணி நேரம் அலை அலையாகக் தொடுத்தார். அவரது சொற்பொழிவு வெள்ளப்பெருக்கு போல் இருந்தது. எல்லோரும வியந்தனர். பட்டர்பிரானை வாயாரப் போற்றினார்கள். "மாலைகளை அழகாகத் தொடுப்பதைப் போலவே தனது சமய ஆதாரங்களையும் மாலையாகத் தொடுத்தாரே பட்டர்" என்று கூறி வியந்தனர்.

அவர் தனது சொற்பொழிவை நிறுத்தி தனது இடத்தில் அமரும் பொழுது கம்பமும் வளைந்து அந்த பொற்கிழியும் அவரது கையில் வந்து விழுந்தது. மன்னன் இதைக் கண்டு ஆச்சர்யமடைந்தான். "பொற்கிழி பெறுவதற்கு பட்டரே தகுதியானவர்" என்று மன்னன் கூறிவிட்டார். பாண்டிய மன்னன் அவரைத் தனது பட்டத்து யானையின் மீது அமரச் செய்து வீதிவலம் வர ஏற்பாடுகளைச் செய்தாா.

வெண்குடையின் கீழ் யானையின் மீது அமர்ந்து மனனர் மாளிகையின் மதில் சுவரை கடப்பதற்குள், பட்டர் தற்செயலாய் ஆகாயத்தை நோக்கினார். நீலமேகச்சியாமளனாகிய திருமால் கருடவாகனத்தில ஸ்ரீ லக்ஷ்மி தேவியுடன் காட்சி அளித்தார். "எவவளவு அழகானகாட்சி! எவ்வளவு அழகாய் திருமால் விளங்கு

கின்றார். அவர்மீது மக்கள் கண திருஷ்டி விழுந்துவிடுமோ'' என று பட்டர் சந்தேகித்தார். கண்திருஷ்டி கழிக்க என்ன செய்யலாம் என்று ஒரு விநாடி யோசித்தார்

நம் வீட்டில் குழந்தைகளுக்கு கண் திருஷ்டி ஏற்பட்டால் பெரியவர்கள் கற்பூரம் ஏற்றி திருஷ்டி கழிப்பார்கள். சிலர் மூன்று கண்களை யுடைய தேங்காய் மூடியை தீயில் எரித்து குழந்தையைச் சுற்றி வீதியில் எறிவார்கள்.சிறிது உப்பும் இரண்டு உளர்ந்த மிளகாய்களைச் சுற்றிநெருப்பில் போடுவார்கள்.

பட்டர்பிரான் திருமாலுக்கு எவ்வாறு திருஷ்டி கழிப்பார். இவரோ யானையின் மீது அமர்ந்திருக்கின்றார். திருமாலோ, ஆகாயத்தில் காட்சி அளிக்கின்றார். எப்படி பரீட்சையில் முதலாவதாக தேறின மாணவனை அவனது தாய் தந்தையர்கள் கண்டு ஆனந்தப்படுவார்களோ அம்மாதிரி திருமால் தனது தர்மபத்னியுடன் பட்டரை மகிழ்வித்தார்; பட்டருககு திருமாலின் அழகு, சௌந்தர்யம் எல்லாம் மாசுபடப்போகிறதோ என்ற கவலைதான் அதிகமாகி விட்டது. உடனே பின் வரும் பல்லாண்டைப் பாடினார்.

'' பல்லாண்டு பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறுயிரம
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா
உன் சேவடி செவ்வி திருக்காப்பு ''

பரந்தாமனுச்கு பலலாணடு பாடிய காரணத்தினால் பட்டா பிரானை வைணவ உலகம ''பெரிய ஆழ்வார்'' எனச் சிறபபுப் பெயர் கொடுத்துப் போற்றுகிறது.

வைணவ கோவில்களில் திவ்வியப் பிரநதம், திருவாய்மொழி இவைகள் ஆரம்பிக்கும்பொழுதும், முடிந்த பிறகும் பட்டர் அருளிய பல்லாண்டைப் பாடுவார்கள். ஆழ்வார்களில் சிறந்தவரான பெரியாழ்வார் துதித்த திருமாலின் திருவடிகளைப் போற்றி நாமும் தொழுவோமாக!

O

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-50
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்)
6-15 ,, 6-45 ,, —சுத்தி—முதல்மணி
6-45 ,, 1-00 மதியம்—ஸர்வதரிசனம்
1-00 ,, 1-30 ,, —சுத்தி, 2-வது மணி
1-30 ,, 7-00 இரவு —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சுத்தி, இரவு மணி
7-30 ,, 8-30 ,, —ஸர்வதரிசனம்
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

4-00 ,, 4-30 ,, —ஸர்வ தரிசனம்
4-30 ,, 5-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50
(நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்)
5-00 ,, 5-15 ,, —நித்ய அர்ச்சனை
5-15 ,, 5-45 ,, —சுத்தி, முதல் மணி
5-45 ,, 7-00 ,, —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சாலிம்பு
7-30 ,, 9-00 ,, —தாயாருக்கு அபிஷேகம்
(ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அலங்காரம், 2வது மணி
10-00 ,, 8-00 இரவு —ஸர்வ தரிசனம்
7-00 ,, 8-00 ,, —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை, (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்)
8-00 ,, 8-30 ,, —இரவு மணி
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

### II ஆர்ஜிதம்

(அ) பொங்கல் ¼ அளவு ரூ. 55/-
(ஆ) புளியோரை ,, ரூ: 50/-
(இ) தத்யோதனம் ,, ரூ. 40/-
(ஈ) கேஸரிபாத் ,, ரூ. 85/-
(உ) சர்க்கரைப் பொங்கல் ,, ரூ. 65/-
(ஊ) தோசைப்படி ,, ரூ. 35/-
(எ) ஸாகரபாத் ,, ரூ. 90/-
(ஏ) ஸீரா ,, ரூ:155/-

### III சேவைகள்

(அ) நித்ய அர்ச்சனை ரூ. 150/- (ஆண்டொன்றுக்கு)
(ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை ரூ. 6-50
(இ) அர்ச்சனை ரூ. 1-00
(ஈ) ஹாரத்தி ரூ. 0-50
(உ) பூராபிஷேகம் (வெள்ளிக்கிழமையில் மட்டும்) ரூ 100-00
(ஊ) ஊஞ்சல் சேவை (வெள்ளிக்கிழமை மாலையில் மட்டும்) ரூ.150-00
(எ) திருச்சி உற்சவம் ரூ. 63-00
(ஏ) யானை வாகனம் ரூ. 32-00

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.



# கீதை காட்டும் நல்வழி

**தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்**

**அத்தியாயம்—16.**

**பகுதி—2.**

## யோகம் :

உயர் ஞானம் கைவரப் பெற்ற பின் அதற்கேற்ப ஒழுகுதல் அல்லது நடத்தல் யோகம் ஆகிறது. அலையும் மனத்தின் அலைவுகளை அடக்குதல் யோகம் ஆகும். மனத்தை சம நிலையில் வைத்திருத்தல் யோகம் ஆகும். தனிப்பட்ட ஜீவன் பரமாத்மனுடன் லயித்தல் யோகம் ஆகும. லாபத்திலும், நஷ்டத்திலும், இகழ்ச்சியிலும், புகழ்ச்சியிலும், ஏற்றத்திலும், இறக்கத்திலும் ஒரே மன நிலையைப் பெற்றிருத்தல் யோகம் ஆகும்.

திரு. டி. கே. நாராயணன,
M.S.c,, M.Phil.,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

# திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| | டி. பி. சி. | ரூ 25/- ரூ.15/- ரூ.10/- |
| | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| | சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| | டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| | **எஸ். வி. விருந்தினர் விடுதி,** | |
| | பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| | மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| | சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| | எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| | மோடிபவன் | ரூ. 100/- |
| | **திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)** | |
| | பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| | ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| | கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| | சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| | எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| | ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| | டி. பி. (உள பகக காட்டேஜ்) | ரூ. 50/- |
| | டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| | டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| | ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

### ஞான யோக வ்யவஸ் திதி:

ஞானத்திலும், யோகத்திலும் எப்பொழுதும் நிலைததிருத்தல் ஒரு சீரிய தெய்வீக குணம் ஆகிறது. உணமையை உணர்தல் ஞானம. அதன் படி நடத்தல் யோகம்.

அபயம், மனத்தூய்மை மற்றும் ஞானத்திலும், யோகததிலும் உறுதி இம்மூன்றும் சாத்வீக குணஙகளில் முக்கியத்துவம் வாய்ந்த முதல் மூன்று ஆகும். ஞான யோகிகளிடத்தில்தான் இவை காணப்படும். ஸாத்விக குணம் இருந்தாலொழிய நம்மால் எநத விதமான யோகத்தையும் பயில இயலாது. இம்மூன்றில் எந்த ஒன்றைப் பின்பற்றினலும் மற்ற இரணடும் தாமாகவே வந்து ஒருவனிடம குடி புகுகின்றன. தெய்வீக இயல்பின் அடித்தளமே அச்சமின்மைதான். வாய்மையின் வழி நடந்த அண்ணல் காந்திஜி, மகான ரமணர், ஸ்ரீராமகிருஷ்ணா, ஸ்ரீசுவாமி சிவானந்தர் போன்ரோரது வாழ்வு இதற்கு எடுத்துக்காட்டு.

### தானம்:

வேணடுவார்க்கு வேண்டியதைக் கொடுப்பது சீரிய தானம் ஆகும. கர்ண மாமன்னனை இன்றும் உலகம் நினைவில் நிறுத்தி போற்றுவதற்கு முக்கிய காரணம் அவனது வீரத்தைக் காட்டிலும் தானமேயாகும். இறந்து போன தன் மனைவியின ஈமக்கிரியைக்கு சந்தனக் கட்டை வேண்டி அர்ஜுனனிடம் சென்ற அநதணருக்கு அவன் அதை எங்குத் தேடியும் கிடைக்கப் பெருததால் அவனிடமிருந்து இல்லையென்ற பதிலே அவருக்குக் கிட்டியது. ஆனல் அதே வேளையில் கர்ணன் சிறிதும் தயங்காமல் தன் மாளிகையின் ஒரு பகுதியையே இடித்து உத்திரத்தில் இருந்த சந்தனக் கட்டைகளைக் கொடுத்து அவரை திருப்திப்படுத்தினன்.

உண்மையான தானம் எதையும் திரும்ப எதிர்பாராது. கொடுப்பது

கொடுத்தவனுக்காகவே என்பதுவே இலட்சிய தானத்தின இயல்பாகும். தனனிடம் இருப்பதை அதுவும இல் லாதவருடன் பகிர்ந்து கொள்ளுதல தான் தானம் என எண்ணிவிடக கூடாது. காலத்தினுற் செய்த உதவி, இனிய வார்த்தைகள் அனைத்துமே பலவகைத் தானமாகும்.

## தமம் :

பொறிகளை அடக்குதல் என்பது இதன் பொருள். தன்னடக்கம், சுயக் கட்டுப்பாடு என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம் புலனடக கம் என்பது பலவந்தமாக மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய வற்றை அதனதன் பணிகளைச் செய்ய விடாது தடுத்தல் என்பதலல. பார்த தலால், கேட்டலால், முகர்தலால், சுவைத்தலால், தொடுதலால் இன் பத்தை நுகர வேண்டும் என்ற எண் ணம் அற்று, அவற்றிற்கு அடிமை யாகாது இருத்தலே ஆகும். பார்ப் பது தவறு அல்ல, பார்க்கப்படு பொருளுக்கு அடிமையாதலதான் தவறு. இதுபோல ஐம்புலன்களின் வலையில் விழாது கவனமாக இருத் தல் 'தமம்' ஆகும். அதனதன வேலையை ஐம்புலன்கள் செய்து கொண்டிருந்தாலும், மனமானது அவற்றின் பின் சென்று மயங்காது யாண்டும் இறைச் சிந்தனையில் இருப் பது மிக உயர்நத நிலையாகிறது.

## யக்ஞம் :

தனக்கு எது மிகவும் பிரியமோ அதை மனமுவந்து ஆத்ம ஞானத தின் பொருட்டு பிறருககுக கொடுத் தல் யக்ஞமாகும். 'யஜ்' என்ற தாதுவிலிருந்து யக்ஞம, யாகம் என்ற சொற்கள் வருகினறன. 'யஜ்' என்றால் கொடுத்தல் என்பது பொருள. தேவ யகஞம, மனுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம், பித்ரு யக்ஞம, பிரம்ம யக்ஞம் ஆகியவை ஒவ்வொரு மனிதனும் செய்ய வேண்டிய பஞ்ச மகா யக்ஞங்களாகும். தான் செய் யும் செயல்களின் மூலம் தன்னைக் கடவுளுக்கென்றே ஒப்படைத்தல் யக்ஞம் ஆகிறது.

## ஸ்வாத்யாயம் :

மறை நூல்களை அன்றாடம் படிப் பது இன்றியமையாதது ஆகும். வேதம, உபநிடதம், கீதை போன்ற வற்றை தினமும் எவ்வளவு முடியு மோ அந்த அளவு பாராயணம் செய் வது 'ஸ்வாத்யாயம்' ஆகிறது. 'ஸ்வாத்யாயாந் ந ப்ரமதிதவ்யம்' என்கிறது உபநிடதம்.

எவ்விதம் தினமும் ஸ்நானம் செய்வதானது உடலின் புற அழுக் கைப் போக்க உதவுகிறதோ, அது போல 'ஸ்வாத்யாயம்' அல்லது மறைநூல் வாசித்தல் அக அழுக் கைப் போக்க உதவும் சிறந்த சாதனமாகும். இன்றைய நாட்க ளில் வேத உபநிடதங்களை ஒருவனால் படிக்க முடியாவிட்டாலும் அவற் றின் சாரமான கீதையையாவது தினமும் சிறிது படித்தல் மிகுந்த பயனைத் தரும்.

## தபம்:

தமிழில் 'தவம்' என்பதுதான் சமஸ்கிருதத்தில் 'தபம்' எனப்படு கிறது. 'உருக்குதல்' அல்லது 'உஷ் ணப்படுத்துதல்' என்பது இந்த வார்த்தையின் புறப் பொருளாகும். எவ்வாறு தாதுக்களை உருக்குவதால் அவற்றில் படிந்துள்ள கசடுகள் நீங்கி அவை தூய்மையடைகின்றனவோ, அதுபோல உடலைப் பல்வேறு விரதங் களால் தவத்திற்கு உட்படுததுகை உடலிலும, உளளத்திலும உளள கசடுகள் நீங்கி அவை தூய்மை யடைகின்றன. உற்ற நோய் நோற் றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அதுவே தவத்திற்கு இலக்கணம் என் பார் வள்ளுவர். ஆத்மாவில் தியானம் செய்வதே சீரிய தவம் என்பார் இமய ஜோதி ஸ்ரீ சுவாமி சிவானந் தர். புறத்தே பாயும் மனத்தை அகமுகமாக்குவதே தவம் என்று அவர் குறிப்பிடுகிறார். இந்தத் தவம் மூன்று வகைப்படும் என்று கூறி அவற்றின் விளக்கத்தை அடுத்த அத்தியாயத்தில் பகவான் தருகிறார்.

## ஆர்ஜவம் :

நேர்மை என்பது இதன் பொருள். பக்தி மார்க்கத்தில் உள்ளவன் தன் மனசாட்சிக்கு ஒப்பவே நடக்க வேண் டும். உள்ளதை உள்ளபடிச் சொல்லிப் பழக வேணடும். இருப்பதை இல்லை யென்றும், இல்லாததை இருப்ப தாகவும் சொல்லுவது ஆர்ஜவம் ஆகாது. ஒரு சில சமயங்களில் இத் தகைய நேர்மையாளனுக்குச் சில கஷ்ட நஷ்டங்கள ஏற்படினும காலக் கிரமத்தில் அவன் பிறரால் மதிக்கப் பட்டு போற்றப்படுவான் என்ப துடன், அவன் மனதில் உயரிய மன அமைதியும், ஆனந்தமும் திகழும். அவனை எல்லோரும நேசிப்பர்; அவ னும் அனைவரையும் நேசிப்பான். தனது அனைத்து முயற்சிகளிலும் அவன் வெற்றியையே காண்பான்.

'அஹிம்ஸா ஸத்ய மக்ரோதஸ்
த்யாக: சாநதிரபைசுனம் !
தயா பூதேஷ்வலோலுபத்வம்
மார்த்வம ஹ்ரீரசாபலம் ‖ (16-2)

"தீங்கிழையாமை, உண்மை, சின மின்மை, துறவு, அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடம் இரக் கம், பிறர் பொருளை விரும்பாமை, இனிமை, நாணம், மனம் சலியாமை.

## அஹிம்ஸை :

சமயங்கள் அனைத்தும் அஹிம் ஸையை அடிப்படையாகக் கொண் டுள்ளன. எவ்வுயிருககும் தீங்கு செய்யாதிருத்தல் ஒரு சீரிய தெய் வீக இயல்பாகும பகவான் புத்தர், அண்ணல் காந்திஜி போன்றோர் அஹிம்ஸாமூர்த்திகளாக விளங்கி னர். 'அஹிம்ஸை' என்பது எண் ணத்தால், சொல்லால், செயலால் பிற உயிருக்குத் தீங்கு செய்யா திருத்தலாகும். ஆனால் 'உயிர்களைக் கொல்லாமை' என்ற பொருளில் தான் பொதுவாக அஹிம்ஸைக்குப் பலர் பொருள் கொள்கிறார்கள். உண மையில் மனதால், வாக்கால், காயத் தால் எதற்கும், எவர்க்கும் தீங்கு செய்யாதிருப்பதே அஹிம்ஸை யாகும். இந்த 'அஹிம்ஸை' ஒரு வனிடம் எப்பொழுது உறுதிபெறும்?

(தொடரும)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை ; தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நித்ய கட்டளை கைங்கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி,சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள்

இரவு7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங்கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன.

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**இதிஹாஸங்களின் விவரம் என்ன?**

"இதிஹாஸம்" என்ற சொல்லை "இதி+ஹ+ஆஸம்" =எனப் பிரித்துப் பொருள் கூறுவார்கள். "இப்படி அல்லவோ இருந்தார்" என்பது சொல்லின் பொருளாகும். பகவான் இராமனாகவும் கிருஷ்ணனாகவும் அவதாரம் செய்து மக்களுக்கு உபதேசம் செய்யும் முறையில் இப்படி அல்லவோ இராமன் நடந்து காட்டினார்; கண்ணன் உபதேசித்துக் காட்டினார் என்பது இச்சொல்லின் விளக்கமாகும். புராணம், இதிஹாஸங்கள் என்ற இரண்டிலும் இதிஹாஸத்துக்கு ஏற்றம் அதிகம். "இவை இரண்டிலும் வைத்துக் கொண்டு இதிஹாஸம் ப்ரபலம்" என ஸ்ரீவசன பூஷணம் அருளும். பெரியோர்கள் அதிகமாக ஆதரிப்பதாலும், நடுநிலையை உடையதாலும், இதிஹாஸத்துக்கு ஏற்றம். மற்றும் "வேதமே இராமாயணமாயிற்று" என்ற வாக்காலும், "விஷ்ணௌ வேதேஷு²வித்வத்ஸு¹" என்ற வாக்காலும், இதிஹாஸம் சிறக்கும். இந்த இதிஹாஸங்கள் ராமாயணம் மஹாபாரதம் என்ற நூல்களாகும். இதிஹாஸங்கள் பெரும்பாலும் காவ்யநடையை ஒத்திருக்கும். இதிஹாஸங்களில் ஒரு தலைவன், ஒரு தலைவி என்பவர்கள் இருப்பார்கள். கதைக் கோர்வை இருக்கும். இடையே மலை, காடு, கடல், நகரம் முதலிய வருணனைகள் இருக்கும். புராணங்கள் நண்பர்கள் மாதிரி உபதேசம் செய்யும். இதிஹாஸங்கள் பிரியமான இளம்மனைவி தன் காதலனுடன் பேசுவது போல் உபதேசம் செய்யும். ஒன்பான் சுவைகள் மிளிர்ந்திருக்கும். கருத்துகள் மனித இயல்பைப் பெரும்பாலும் ஒத்தும் இருக்கும். கதைப் போக்கும் தொடர்ந்திருக்கும். பிறப்பிலி ஆன பகவான் மக்களுக்காகவே அவதாரம் எடுக்கிறார். வேதம் "ஸ உ ச்ரேயான் பவதி ஜாயமான:" என்ற வாக்யத்தால் அப்படி அவன் அவதாரம் எடுப்பதால்தான் அவன் சிறப்பை அடைகிறான் என்றது. மேலே ஏறும்படிக்கு ஸோபானம் எனப்பெயர். கீழே இறங்கும்படிக்கு அவதாரம் எனப் பெயர். ஆகப் பகவான் "கிணற்றில் குழந்தை விழுந்துவிட்டால் தாயும் உடன் குதிப்பது போல் மக்களின் வாழ்க்கையாகிற கிணற்றில் கர்ம வினையால் தள்ளப்பட்டு அவதிப்படுகையில் அவர்களைக் காப்பாற்றும் நோக்கத்துடன் பகவானும் கீழே இறங்குகிறார். தந்நிலையை விட்டுத் தாழ வருவதே அவதாரமாகும். உடைமைக்கு ஒரு முழுக்கு, உடையானுக்குப் பத்து முழுக்கு என்ற பழமொழி இக்கருத்தை வலியுறுத்தும். ஆக இந்த அவதாரப் பெருமைகள் எல்லாம் நன்கு கதை மூலம் விளக்குபவைதான் இதிஹாஸமாகும்.

**ராமாயணத்தின் சிறப்பென்ன?**

"ராமாயணம்" என்ற சொல்லை ராம+அயனம் எனப் பிரிக்க வேண்டும். 'அயனம்' என்ற சொல் "நாராயண" என்ற சொல்லில் வரும். அயனம் என்ற சொல் போல் வைத்துப் பொருள் கூறினால், ராமனுடைய 16 கல்யாண குணங்களும் விளக்கப்படும் நூல்எனவும் வரும். அருங்குணங்கள் யாவும் எந்த ராமனிடம் குடி கொண்டிருக்குமோ, அவனைத் தலைவனாகக் கொண்ட அரும் நூல் எனவும் பொருள் கூறலாம். மற்றும் புலவர்கள் இச்சொல்லை நயப்படுத்திப் பல பொருள் உரைப்பர். நம் பாரதத்தின் பழம்பெருமையைக் காண இரட்டைலென்ஸ் பூட்டப்பட்ட ஒரு பைனாகுலராக விளங்குவது ராமாயணமும் பாரதமுமாகும். வேதங்கள் உபதேசிக்கும் அறநெறிகள் யாவும் பிரவ்ருத்திமார்க்கம் அதாவது உலக இயல், நிவ்ருத்திமார்க்கம் அதாவது மறு உலக இயல் என்ற இரு தத்துவங்களில் அடங்கும். இதனை வாழ்வியல் ஒழிவியல் எனவும் மற்றோர் வகையில் அழைப்பர். பிரவ்ருத்திமார்க்கத்தையும் விடாது, மனிதனை அதன் வழியில் செலுத்தி நிவ்ருத்தி மார்க்கத்துக்கு வழிவகுத்துத் தருவதே ராமாயணமாகும். இதற்கு "ஆதிகாவ்யம்" எனப்பெயர். பிற்காலக் கவிஞர்களுக்கு இது இலக்கிய வழி காட்டியாகவும் இருக்கும். அதனால் இராமாயணம் யாத்த வால்மீகியை 'மார்க்க தர்சி' எனவும் அழைப்பதுண்டு. ராமாயணக் கதையைக் குறிப்பாக வேதத்திலும் காட்டுவதுண்டு. ருக்வேதத்தில். "பத்ரோபத்ரயா ஸ சமான ஆகாத்' என்று வருகிறது. அங்கு 'பத்ர' என்ற சொல்லுக்கு ராமன் என்ற பொருள் காட்டப்பட்டுள்ளது. இந்த ருக்கின் அடிப்படையில் பிறகு ராமனுக்கு, ராமபத்ரன் எனவும் திருப்பெயர் ஏற்பட்டதென்றும் சிலர் கூறுவார்கள்.

வேதமே, இராமாயணம் என்ற இலக்கிய வடிவம் கொண்டது எனலாம். வேதத்தின் சிக்கலான, ஆழ்ந்த கருத்துக்கள் ராமாயணத்தில் எளிய கதைக்

கோர்வையில் கலந்து வெளியாகும். இந்த ராமாயணத்தில் சுயநலக்கருத்தை மையமாகக் கொண்ட ப்ரவ்ருத்தி மார்க்கத்திற்கு ராவணனும், மக்கள் நலம் பிறர் நலமே முற்றிலும் கொண்ட ப்ரவ்த்தி மார்க்கத்திற்கு ராமனும் லக்ஷிய புருஷர்களாகக் காட்டப்படும். இருவரும் அதிமானுஷர்கள். ராவணன் ராமன் இவர்களின் கொள்கைக்கும் கோட்பாட்டிற்கும் இடையே உரைகல்லாக அமைந்த பெரும் கற்புத் தெய்வம் சீதை. தருமமும், அதர்மமும் போட்டிப் போடுகின்றன. முதலில் அதர்மம் வென்று தர்மம் கஷ்டப்படும். ஆனால் முடிவில் தர்மமே வெல்லும் நிலைத்தும் நிற்கும் என்ற உண்மையை ராமாயணக் கதைக் காட்டிச் சீதை என்ற உறுதிப்பாட்டால் இதற்குச் சிறப்பும் ஏற்படும் என்ற உண்மையை விளக்கும் நூலிது. ஜீவான்மாவும், பரமான்மாவும் பத்து இந்திரியங்களாகிய மனம் என்ற பத்துத்தலை ராவணனால் வஞ்சனையாகப் பிரிக்கப்பட்டுத் துன்பமே தரும் பிரபஞ்சமாகிய இலங்கைத் தீவிலும் ப்ரஸ்ரவணமலையிலும் துன்பப்படுகையில் இடையில் ஆசார்யனாகிய அனுமானால் இந்த இரண்டு ஆத்மாக்களுக்களும் உண்மை நிலை காட்டி மறுபடியும் கூட்டி வைக்கப்படுகிறார்கள் என்பதே கதையின் உட்பொருள். இந்நூல் வேதங்களில் கூறப்பட்ட பரமசாரமான மோக்ஷோபாயதத்துவமான சரணாகதியின் சாரமாக விளங்கும். அதனால் இதற்குச் "சரணாகதி சாஸ்திரம்" எனவும் பெயர் ஏற்பட்டது. இந்தச் சரணாகதி தத்துவமே இக்காவ்யத்தின் உயிர்நாடி அல்லது முதுகெலும்பு எனலாம்.

(தொடரும்)

# ★ திருவுத்தரகோச மங்கை ★

வளர்கின்ற நின் கருணைக் கையில்
வாங்கவு நீங்கி இப்பால்
மிளிர்கின்ற வெண்ணை விடுதிகண்
டாய் வெண் மதிக் கொழுந்தொன்
றொளிர்கின்ற நீண்முடி யுத்தர
கோச மங்கைக் கரசே
தெளிகின்ற பொன்னு மின்னும்
மன்ன
தோற்றச் செழுஞ்சுடரே.

(திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம்):

உத்தரகோசமங்கை என்னும் திருத்தலம் இராமநாதபுரத்திலிருந்து தென் மேற்கில் 10 மைல் தொலைவில் அமைந்துள்ளது. திருப்புல்லாணி, இராமேஸ்வரம், திருச்சுழி, திருமருதூர், திருவாடானை, திருப்புனல்வாயில் முதலிய தலங்கள் சூழ்ந்திருக்க நடுவே அமைந்த அழகுடைத் தலம் இது.

**பழம்பெரும் தலம்:**

பாண்டிய நாட்டில் உள்ள தலங்களில் இது மிகவும் பழமையும், பெருமையும் வாய்ந்ததலம் ஆகும். 'மண்ணு முந்தியா? மங்கை முந்தியா?' என்னும் பழமொழி மூலம் இதனை நாம் அறியலாம். இத்தலம் தேவாரத்தில் இடம் பெறவிடினும், மணிவாசகரின் திருவாசகத்தில் பெரிதும் இடம் பெற்றுள்ளது.

திருவாசகத்தின்கண் அமைந்துள்ள திருத்தசாங்கத்தில் சிவபிரானுக்கு உரிய ஊர் உத்தரகோச மங்கையே என்று கூறுகிறார் மணிவாசகர். இதனை,

'' பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்
போற் கொண்டாடும்
உத்தரகோசமங்கை யூர்.
(திருத்தசாங்கம்-3)

என்னும் பாடலால் அறியலாம்.

**தலவரலாறு:**

சிவபிரான் வலைவீசிய திருவிளையாடலை நாம் அறிவோம். வலைஞர்கள்பால் மகளாய் வந்து வளர்ந்த அம்பிகையை மணம்புரிந்து கொண்டு, கடலில் சுறுமீனின் வாயினின்று மீட்ட ஆகம நூல்களை உலகிற்கு வெளிப்படுத்தியது இத்தலமே ஆகும். இதனைத் திருவாசகத்தின் கீர்த்தித் திருவகவலில்,

'' கேவேடராகிக் கெளிறது படுத்தும்
மா வேட்டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத்திருந்து
உற்ற ஐம் முகங்களாற்
பணித்தருளியும்,

என்னும் தொடர்களால் அறியலாம். இங்கு மாகேந்திரம் என்பது திருவுத்தரகோசமங்கைக்கு அமைந்த மற்றொரு பெயராகும்;

**பெயர்க்காரணம்:**

உத்தரம் என்றால் உபதேசம் என்று பொருள்படும். கோசம் என்றால் மறைபொருள் என்று பொருள்; மங்கை என்பது உமாதேவியார்; சிவபெருமான் உமாதேவியாருக்கு வேதாகமங்களின் மறைபொருள்களை இத்தலத்தில் உபதேசித்தமையால் இதற்கு உத்தரகோசமங்கை என்று பெயர் ஏற்பட்டது.

இனி மற்றொரு பொருளையும் நோக்குவோம். உ = உயர்ந்த; தரம் = தகுதிப்பாடு; கோசம் = நூல்; மங்கை–மங்கலம் என்று பொருள் கொண்டு, "உயர்ந்த தகுதிப்பாடு மிக்க ஆகம நூல்களை இறைவன் வெளிப்படுத்திய மங்கலம் அமைந்த தலம்'', என்பது இதன் பொருள் எனச் சிலர் கூறுவர்.

**தலத்திற்கு அமைந்த வேறு பெயர்கள் :**

மங்களபுரி, பிரமபுரம், சாத்வீகத் தானம், இலந்தைக்காடு, பார்வதிபுரம், சித்தக்ஷேத்திரம், தக்ஷணகாசி, சதுர்வேதபுரி, கல்யாணபுரம் எனப் பல பெயர்கள் இத்தலத்திற்கு உண்டு.

**தீர்த்தங்கள்:**

அக்கினி தீர்த்தம், பிரம தீர்த்தம், இந்திர தீர்த்தம், சார்வதி தீர்த்தம், தேவி தீர்த்தம், ஹரித்வாஜ கூப தீர்த்தம் எனப் பலத் தீர்த்தங்கள் உள.

---

*திரு. எம். சீனிவாசன், M.A. B. Ed,*
*பரமக்குடி.*

---

**இறைவன் பெயர்கள்:**

இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள சிவபிரான் மங்களநாதர், பிரளயாகேசுரர், துரிதாபகர் என்று பல பெயர்களைக் கொண்டு விளங்குகின்றார்.

'' உத்தரகோச மங்கையுள் இருந்து
வித்தகவேடம் காட்டிய இயல்பு''

என்னும் திருவாசகத் தொடரால், "காட்சி கொடுத்த நாயகர்,'' என்றும் அழைக்கப்படுகிறார்.

**இறைவியின் பெயர்கள்:**

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அம்பிகைக்கு மங்களேஸ்வரி, மங்களநாயகி, கல்யாணசுந்தரி எனப் பலத் திருநாமங்கள் உண்டு. வலைஞர் மகளாக வந்து பிறந்தமையால் 'திரை சேர் மடந்தை' என்ற பெயரையும் பெற்றுள்ளார். அம்பிகை மீது பாடப்பட்ட மங்களாம்பிகை பிள்ளை தமிழ் என்னும் நூலும் உள்ளது.

**பேறு பெற்றோர்:**

பிரமன், வேதமித்திரன், கந்தருவ கன்னியர், அரித்துவசன், நளன், அம்பிகை முதலியோர் சிவபிரானை வழிபட்டுப் பேறு பெற்றனர். மணி வாசக சுவாமிகள் இங்கேயே தங்கியிருந்து 'நீத்தல் விண்ணப்பம்', 'திருப் பொன்னூசல்' ஆகிய திருப்பதிகங்களைப்பாடி அட்டமா சித்திகளையும் கைவரப் பெற்றார். இத்திருப்பொன்னூசல் பாடல்களே அனைத்துச் சிவாலயங்களிலும் இரவு பள்ளியறைப் பூசையின்போது இசைக்கப்படுகிறது. சித்தர்களில் ஒருவராகிய காகபுஜண்டர் இங்குதான் சித்தி பெற்றார் என்றும் கூறப்படுகிறது.

**மரகத நடராசர்:**

'அறையில் ஆடி அம்பலத்தில் ஆடுக' என்பது பழமொழி. இறைவன் பொன்னம்பலமாகிய சிதம்பரத்தில் ஆடல்புரியும் முன்னரே இங்குத் திருநடனம் புரிந்தான் என்பது தல புராணம். எனவேதான் இதற்கு ஆதிசிதம்பரம் என்றும், இறைவனுக்கு ஆதிசிதம்பரேஸ்வரர் என்னும் திருநாமமும் ஏற்பட்டன. இங்கு எழுந்தருளியுள்ள நடராஜப் பெருமானின் திருவுருவம் மரகதம் என்னும் பச்சை நிறப் பளிங்கினால் அமைந்துள்ளது. எனவேதான் சன்னதியில் மேளம் இசைப்பதில்லை. பஞ்சவாத்தியம் மட்டுமே இசைக்கப் படுகிறது. மேளஒலியால் சிலைக்கு அதிர்வு ஏற்படும் என்பது இதன் கருத்து.

மார்கழி மாதத் திருவாதிரை நாளில் இவருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றது. அன்று மட்டுமே மூலவரை நாம் முழுமையாகக் காண முடியும். மற்ற நாளில் சந்தனக் காப்பிட்டு வைக்கப்பட்டுள்ளது.

**திருவிழாக்கள்:**

சித்திரை மாதத்தில் திருக்கல்யாணத் திருவிழாவும்,வைகாசியில் வஸந்தோற்சவமும், ஆனியில் சிவ உற்சவமும் முறையே பத்து நாட்கள் நடைபெறுகின்றன. மார்கழியில் திருவாதிரை, ஐப்பசியில் அன்னாபிஷேகம், மாசியில் சிவராத்திரி முதலியவை சிறப்பாக நடைபெறுகின்றன.

**திருப்பணி:**

இராமநாதபுரம் சேது சமஸ்தானத்தினரால் நிர்வகிக்கப்படும் சிறப்புடைய இக்கோவிலின் பழுதடைந்த பகுதிகள் தற்போது இராமநாதபுரம் மகாராணி அவர்களின் மேற்பார்வையில் புதுப்பிக்கப்பட்டு வருகின்றன. பெரிய கல்திருப்பணி நடைபெற்று வருகிறது. மெய்யன்பர்கள் இத் திருப்பணிக்கு வேண்டிய உதவிகளைச் செய்து மங்களநாதரின் திருவருளைப் பெறலாம்.

"உத்தம மாவளங்கொள் உத்தரகோச மங்கை"

என அருணகிரிநாதரால் பாடப் பெற்ற இத்தலத்திற்கு நாமும் சென்று வழிபாடு செய்து நல்லருள் பெறுவோமாக.

"தெங்குலவு சோலைத் திருவுத்தரகோச மங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பு அறுத்திட்டு எந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம் பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூஞ்சல் ஆடாமோ".

(திருவாசகம்-திருப்பொன்னூஞ்சல்).



## தயரதனின் சோதிட அறிவு

ஒருவனுடைய ஜன்ம நக்ஷத்திரத்தில் சூரியன், செவ்வாய், ராகு ஆகியோர் சேர்ந்தால் அவனுக்கு மரணமோ அல்லது பெரும் விபத்தோ சம்பவிக்கும். இதற்கு ஓர் உதாரணம்.

தயரதன் இராமனுக்கு உடனடியாக முடி சூட்ட நினைத்தமைக்குச் சில காரணங்கள் வால்மீகி ராமாயணத்தில் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்று:

"அவஷ்டப்தம் ச மே ராம நக்ஷத்ரம் தாருணைர்க்ரஹை: |
ஆவேதயந்தி தைவக்ஞா: சூர்யாங்காரக ராகுபி: ||

என்பதாகும். 'என்னுடைய ஜன்ம நக்ஷத்திரத்தில் சூரியன்,செவ்வாய், ராகு ஆகியோர் சேர்ந்தனர். இது போன்ற கிரஹ சேர்க்கை மரணத்தையோ பெரும் விபத்தையோ சம்பவிக்கும் என்பதைத் தெரிவிக்கிறது. எனவே ராமனுக்கு உடனே பட்டாபிஷேகம் செய்துவிட எண்ணுகிறேன்" என்கிறான். ஆனால் விதியின் பயன் இராமனைக் காட்டிற்கு அனுப்பி, தயரதனின் வாழ்வையும் முடித்தது. இவ்விளைவை முன்னமே அறிந்த தயரதனின் சோதிட அறிவு நம்மை வியக்க வைக்கிறதன்றோ!

திரு. மீ. சீனிவாசன் எம்.ஏ.,பி.டி., பரமக்குடி.

தொடர் நூல் :

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

### சிறியாண்டான் அனந்தாழ்வானை முன்னிட்டு முக்தி பெற்றது:

ஒருகால் ஸ்ரீரங்கத்தில் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பிள்ளை மஹாபலிவாணுதிராயர் மருதூர்நமபி (மாருதிச்) சிறியாணடான் என்னும் இந்நால்வரும் இவ்வுலக வாழக்கையில் துன்பமிகுதி கணடு உடனே மோக்ஷம் பெற வேணடும்படியான துரிதமுடையவர்களாய் பகவத்ராமானுஜ முனிவரைத் தஞ்சமாகப் பற்ற, அவர்களில் முதல்வரான மூவரும் அம்முனிவரின் ஆணையின்படியே தத்தம் விருப்பம் விரைவு இவற்றின் பக்குவ நிலைக்குத் தக்கவாறு அங்கங்குச சென்று தாந்தாம் அடையும் பயனைப பெற்று த்ருப்தியடைந்திருக்குமளவில், நாலாமவரான சிறியாணடானும் அப்போதே மோக்ஷம பெற விரும்பி, தண்ணீர் கிடையாமையால் நாக்கு வற்றி இறககும தறுவாயில் இருக்கும் தாகமுடையவன் போல், 'ஸ்ம்ஸாரமாகிற (பிறப்பிறப்புகளின் தொடர்ச்சியாகிற) பாலைவனத்தில உடலின் கண் உண்டாகும் ஜ்வரம் முதலிய நோய், இடி முன்னல் வெப்பம் தொடககமாகத் தேவர்களால் நேரும் துக்கம் எனகிற மூவகைத் தாபங்களினுல் வருத்தமுறற அடியேன் இப்போதே ஆராவமுதமான மோக்ஷத்தைப் பெறுவிடில் உயிர் தரித்திருக்க வல்லேனல்லேன்' என்று ஸ்ரீராமானுஜமுனிவரிடம் விணணப்பிக்க, 'வாரீர் சிறியாத்தானே நீர் விரும்பும் பயனைத் தருமவன் திருவேங்கடமுடையானன்றோ? அவனிடம் சென்று அனந்தாழ்வானுடைய தகுந்த புருஷகாரத்தினுல் (சிபாரிசினுல்) அந்த பகவானைத் தஞ்சமடைநது பயனைப் பெறக்கடவீர்' என்று இராமாநுஜர் பதிலளிக்க, சிறியாணடான் திருவேங்கடமுடையானிடம் நமககுள்ள பற்றின மிகுதியினுல் உடனே புறப்பட்டுத் திருமலையை அடைந்து அனநதாழ்வானை ஸேவித்துத் தமது கருத்தையும் ஸ்ரீ ராமானுஜரின் திருவாணையையும் அவரிடம் தெரிவிதது 'ஸவாமீ அனநதாழ்வானே, உமமுடைய புருஷகாரததினுல்தான் திருவேஙகடமுடையான் உடனே அடியேனைக் காப்பாறறகடவர். ஆகையினுல் இரங்கியருளவேணும்' என்று வேண்ட, அனந்தாழ்வான்-இச்சிறியாணடான் எல்லையான ஆர்த்தியை (=உலக வாழ்வில் துன்பத்தை) உடையவர், எல்லா நற்குணஙகளாலும் விளங்குமவராய் நல்லாசிரியரென்ற சொல்லுக்கு முக்கியப் பொருளானவருமான ஸ்ரீமான் ராமாநுஜ முனிவர் இவரை நியமிதத ஆசாரியர், எல்லாமறிநதவனும் எதையும் செய்யவல்ல ஆறறல் படைத்தவனும நறபணபுகள் அனைத்துககும கடல் போன்றவனுமான திருவேங்கடமுடையான் இவர் விருமபும பயனைத் தருமவன். ஆக, இவா வேணடும புருஷார்த்தம் (மோக்ஷம்) இபபோதே ஸித்திக்கத் தக்கதேயாகும. எல்லாமறிந்து எலலாம வல்லவனுன பரமபுருஷன் இவர் வேண்டியதைக் கொடுககு முயனறவளவில் அதைத் தடுக்கவல்லார் யார் உளர்? அனைத்துலகுக்கும் தாயான ஸ்ரீ மஹாலக்ஷ்மி இப்பெருமானுடைய திருமார்பை இறையும் அகலாமல் இருக்கிறுள். இவ்வாறிருக்க, இப்போதே இவருக்கு மோக்ஷம் ஸித்திப்பதில் ஐயம் சிறிதும் இல்லை. ஆகையால் இவர் எனது புருஷகாரத்தை வெறுயுனே விரும்புகிறுா. புருஷகாரம செய்யுமாறு பகவத ராமாநுஜ முனிவர் என்னை நியமிக்கிறுர். ஆதலால் அவசியமாக இவர் திறத்தில் புருஷகாரம் செய்ய வேண்டுமென்று நினைத்து மனவமைதி பெறறு, வாரீர் சிறியாண்டானே, அப்படியானுல் வாரும், பகவத்ராமாநுஜரின திருவாணையினபடி திருவேஙகடமுடையானிடம் செல்வோமெனறு கூற, அவருடன கூடிச் சிறியாணடான் திருவேங்கடவனை அணுகலானுா.

---

திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—விதவான, திருப்பதி.

---

இப்படி அனந்தாழவானும் சிறியாணடானுமாகப் பெருமானைத் தணடனிட்டுககோவிலுக்குள் சென்று பெருமாள் முன்னே நிற்க, பெருமாளும் கருணையினுல் குளிர்நத தன் கடைக் கணணேககை வெள்ளததினுல் அவ்விருவரையும அபிஷேகம செயது, தீர்த்தம் ஸ்ரீசடகோபன் திருமாலை உடுததுக களைநத பீதகவாடை சநதனக குழமபு முதலானவறறை வழஙகியருள, அவறறைப பெற்று அலஙகரித்துக கொணட அவ்விருவரும் பெருமாள் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்ட பிறகும்கூட வெளியே செல்லாமல் சிறிது போது அங்கேயே நின்று கொண்டிருப்ப

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ மொழிபெயர்ப்பு)

# பள்ளிகொண்டேஸ்வர பாமாலை

**'சிவனருட் செல்வன்' முன்னண்டிரம் ராமனுஜ கவிசிவதாசன்**

**காப்பு**

*காலனுக்கு(க) காலனை கண மூன்றுடையோனை*
*ஞாலத்தின் உயிரை நான்மறை பொருளை*
*மோனத்தில் அமர்ந்த குரு தட்சிணாமூர்த்தியை*
*காளத்திமலை கண்ணப்ப வேடனமகிழ்சிவனை*
*கானத்தில் இனிய ராகத்தின் உருவை*
*பாவத்தை(த்) தீர்த்திடும் பள்ளிகொண்டேசனை*
*பாடிட துணைசெய் துதிகளை நாதா*
*பாமாலை நலமாக வரமருள் வேதா.*

**நூல**

*என்னுடல் என்னுயிர் என்பொருள் என்பது*
*என்றுதான் மாறுமோ? ஏகாந்தன் தோன்றுமோ*
*இன்றுதான் நல்லநாள் என்றுனை பாடுகிறேன்*
*என்றுதான் உன்னருள் கிடைப்பதோ ஈசா*
*என்குரு காலடி ஜகத்குரு காஞ்சியின*
*சற்குரு சந்த்ர சேகரர் போற்றிடும்*
*பொன்னெழில ரூபா பூரண நாதா*
*உன்பதம தொழுதேன அருளிட வாராய்.*

*தமிழாய் தேனாய் அமுதாய் பாகாய்*
*மலராய் மணமாய்*
*தனியாய் தொடர்பாய தவமாய் நலமாய்*
*உலகாய் உயிராய்*
*கருவாய் உருவாய் ஆணாய் பெண்ணாய்*
*பலவாய் பொதுவாய்*
*கடலாய் கரையாய் வானாய் மண்ணாய்*
*ஆனாய் சிவனே.*

*சங்கத்தின் தமிழில் சதாசிவம் தெரியும்—அருள்*
*சிங்கத்தில் அமர்ந்தவள் நாயகா போற்றி*
*சங்கரன் சாஸ்வதன் சசசிதானந்தன்—உயர்*
*சம்புவாய் ஐம்புலன் காப்பாய் போற்றி—மகன்*
*ஐங்கரன், ஆறுமுகன், ஐயப்பன் மகிழ்பரசிவ*
*ஓங்கார மூர்த்தியே உண்மையே போற்றி*
*கிங்கரன் எமன் எவன் வந்தபோதும்—உயிர்*
*பங்கத்தைத் தடுத்தாள் ஈசா போற்றி போற்றி.*

*காளத்தி மலைமீது கணணளிதத கண்ணபபன் தானறிவான்*
*தாளத்தில் பாட்டிசைத்த நாயன்மார் கண்டறிவார்—எவ்*
*வேடததிலும கணடால மயங்காத தேவர்—உம்*
*வேகத்தில் கொண்ட சயனத்தில் மயக்கம் கண்டார்*
*தாளததில் இசையும் வாழவிறகு அருளும்—அழகு*
*வேடததின் விளைவும் வேண்டும் ஈசா—தங்க*
*பாளத்தில் திருநீறை அணிந்தவா தயாபரா—சூழ்*
*மாயத்தை போக்கி யருள் பள்ளிகொண்டேசா.*

*அயன்முதல் எவரும் காண அரிய ஜோதியே*
*பயந்தீர்த்திடும் பரமசிவனே பக்தப்ரியனே*
*துயர்களைந்திடு காடாடிடும் இன்பமே இறைவா*
*சயனித்தது போதும் கண்திறந் தருள்வாய்.*

*தனைக் கண்டு ஸந்தேகங் கொண்ட திருவேங்கடவன் 'வாரீர் அனந்தாழ்வானே, ஏதோ விண்ணப்பம் செய்ய விருப்பமுடையவர்போல் நிறகிறீரே, அப்படி ஏதேனும இருந்தால் கூசாமல் விணணபபம் செயயுமென்று பணித்தருள, அது கேட்ட அனந்தாழ்வான்-'வாரீா பெருமானே இச சிறியாண்டான் உலக வாழ்வில் துன்பம் மிகப் பெற்று மோக்ஷம் பெறப் பிரபத்தி செய்தவராய் பகவத்ராமானுஜரால் நியமிக்கப்பட்டு மோக்ஷத்தை இப்போதே அவருக்கு அதைத் தேவரீர் தந்தருள வேணும. தேவரீர் கருணையுடையவர்களில் தலைவரன்றோ? தஞசமடைந்தவர்களிடம் கடலபோல் அளவிறந்த பாசமுடையவரனறோ? எதையும செய்ய வல்ல ஆறறல் படைத்தவரன்றோ? நற்குண கணங்கள் அனைத்துக்கும் பெருங்கடலனறோ? இதைவிட. அதிகமாக விணணபபிகக வேணடியது என்ன இருககிறது?' என்று கூற, பகவான் அதைக் கேட்டு, 'வாரீர்-நித்ய ஸூரிகளின் ராஜதானியாய்ப பரமாகாசமெனனும பரமபததனை நான் உமக்குத் தந்தேன பெற்றுக் கொள்வீராக' என்று, 'வானவர் நாட்டையும நீ கணடுகொள்ளென்று வீடும் தரும' எனறு நம்மாழ்வார் (திருவாய்மொழி 4-9-9) அருளிச் செய்தபடியே, அடியததகக பயன்களுக்குள் எல்லையான பரமபதத்தைச் சிறியாணடானுககுத் தந்தருளினார்.*

*(தொடரும்)*

---

## அறிவிப்பு

**ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப் படும். ஒரு வருடத்திற்கும குறைவான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.**

**ஆண்டுச் சந்தா ரூ. 12/-**

---

# குயிலார் வணங்கிய சிவனார்

தேவருலகில் காந்தர்வன் ஒருவன் ஆகாச கங்கையில் பல பெண்களுடன் நீராடி மகிழ்ந்திருந்தான். அதுபோது நாரத மாமுனிவர் அவ்வழி வந்தார். காந்தர்வன் நாரதரைக் கவனித்தும் கவனிக்காதது போல் பெண்களின் மையலிலே கிடந்தான். அதுகண்ட நாரதா கோபமுற்று காந்தர்வனை "நீ ஒரு குயிலாகக் கடவாய்" எனச் சபித்தார். காந்தர்வன் நாரதரை அணுகி தனது தவறினைப் பொறுத்தருள வேண்டினான். நாரதர் காந்தர்வனிடம் "நீ நிலவுலகில் பொருநை ஆறு பாயும் ஆமலகவனத்தில் ஒரு குயிலாகப் பிறந்து அங்குறையும் காசிபேசுரரை வணங்க எனது சாபம் நீங்கி மீண்டும் தேவருலகம் வந்தடைவாய்" என்று கூறி அகன்றார்.

நாரதரின் வாக்குப்படி கந்தர்வனும் பொதிகை மலையில் தோன்றி தென்பாண்டி நாட்டை செழிப்படையச் செய்யும் பொருநை ஆற்றுப் பகுதியில் ஆமலகவனம் என்று அழைக்கப்படும் காட்டில் குயிலாகப் பிறந்தான்.

குயில் அவ்வனத்தே வாழ்ந்துவந்த போது ஒருநாள் காட்டிற்குள் ஒரு கோயில் இருப்பதையும் அங்குறையும் சிவனை பலரும் வணங்கிச் செல்வதையும் பார்த்தது. அக்குயிலுக்கு முற்பிறவி தெரிந்தது. நாரதரின் வாக்கும் நினைவிற்கு வந்தது.

அங்குள்ள சிவனை பலரும் வணங்கி அர்ச்சகர் உட்பட எல்லோரும் சென்றபின் தனது அலகினாலேயே பொருநையாற்று நீரைக் கொண்டு வந்து ஈசுவரரைத் திருமுழுக்காட்டி மலர்கள் கொண்டு அர்ச்சித்து, கனி வகைகளைப் படைத்து, இனிமையாக இசைபாடி வழிபட்டது. பிறர் வரு முன் கோயிலினின்றும் அகன்றது. பலநாட்களாக இவ்வாறே நடந்து வந்தது.

கோவிலைத் திறந்த அர்ச்சகர் இறைவனின் திருக்கோலத்தில் மாற்றத்தைக் கண்டார். கோவிலைப் பூட்டியபின் யாரோ கோவிலுக்குள் வந்து வேண்டுமென தீச்செயல் புரிவதாக எண்ணினார். நடக்கும் விபரங்களை அப்பகுதி குறுநில மன்னனுக்குத் தெரிவித்தார்.

மன்னன் வீரர்களை அனுப்பி, கோவிலுக்கு காவல் இட்டு யார் அந்தச் தீச்செயலை செய்வது என்று அறிய முற்பட்டார். காவலர்கள் யாரும் குயிலின் வழிபாட்டை எண்ணவில்லை. நடப்பதை ஒருவராலும் அறிய இயலவில்லை. குயிலோ வழக்கம் போல் இறைவனைத் தொடர்ந்து வழிபட்டு வந்தது.

விபரங்களைக் கேள்விப்பட்ட மன்னன் கடுங்கோபமுற்று "நானே அந்தத் தீயவனைக் கண்டுபிடித்து தலையைத் துண்டிப்பேன்" என்று வஞ்சினம் கூறி கோயிலை அடைந்தான். இறைவனை வழிபட்டு தீயவனைக்கண்டு பிடிப்பதற்காக கோயில் வாசலில் காத்திருந்தான். சிறிது நேரத்தில் அங்கேயே துயில் கொண்டான்.

அப்பொழுது மன்னனுடைய கனவில் இறைவன் தோன்றி குயில் தனக்கு நடத்திவரும் வழிப்பாட்டை விளக்கினார். மன்னனும் துயில் எழுந்து குயிலின் இறை வழிபாட்டைக் கண்டான். மன்னன் தனது ஐயத்தைப் போக்கிய இறைவனைப் போற்றி, புகழ்ந்து துதித்து, குயிலின் வழிபாட்டிற்கு இடையூறு ஏற்படாமல் இருக்க ஆணையிட்டான்.

குயிலின் வழிபாட்டில் மகிழ்வுற்ற இறைவன் ஒருநாள் குயிலிடம் "உனக்கு வேண்டியதைக் கேட்பாயாக" என்று கூறினார். குயிலும் மகிழ்ந்து சிவபெருமானிடம் "தங்களை நான வழிபட்டதற்குச் சான்றாக தாங்கள் என்னுடைய பெயரைக் கொண்டமைய வேண்டும்" என வேண்டிக் கொண்டது. இறைவனும் "அவ்வாறே ஆகுக" என உத்திரவிட்டார். அதன் பொருட்டு இறைவன் மன்னனுடைய கனவில் மீண்டும் தோன்றி தன்னை மன்னனும் மக்களும் குயிலின் பெயர் கொண்டு அழைக்க உபதேசித்தார். அது முதல் இறைவனை மன்னனும் மக்களும் "கோகிலேச்சுரர்" என்னும் திருநாமத்தால் அழைத்து வழிபட்டனர் என்று வரலாறு கூறுகிறது. தமிழில் 'கோகிலம்' என்பதற்கு 'குயில்' என்ற ஒரு பொருளும் இதனை மெய்ப்பிக்கும்.

திரு. முடிவை முத்து
கோவில்பட்டி.

பின்பு அத்திருக்கோயிலைச் சுற்றி ஏற்பட்ட ஊர் "கோகிலேச்சுரம்" என்றும், அங்குள்ள பொருநையாற்றுத் தீர்த்தம் "கோகில தீர்த்தம்" எனவும் வழங்கப்படுகின்றன. இத்திருத்தலம் சிவத்தலங்களில் முக்கியமான ஒன்றாகும். இத்தலம் தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில், அம்பாசமுத்திரம் என்னும் தாலுகா தலைநகருக்கு அருகே, பொருநை என்னும் தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ளது. இங்குள்ள தீர்த்தத்தில் நீராடி அகத்திய மாமுனிவரும் இறைவனை வழிபட்டார் என்று கூறுவர். இத்தீர்த்தம் காசிக்கு நிகரானது என்றும் உரைப்பர்.

ஆதாரம்-"திருவருட்கதைகள்"



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொணடு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாததிரிகர்களின கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாணமை இம்முயற்சியில் இறஙகியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ கட்டடத்தின் அடித்தளத்திலும, முதல் தளத்திலும் ஒவ்வொனறும் 4 அறைத்தொகுதிகள் கொணட 16 குடிலகள் கட்டப்படும். ஒவவொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொது தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருககும். 320 அடி சதுரஅளவு கட்டட அறைகொணட ஒவ்வொருஅறைததொகுதிக்கான நனகொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுககான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளை ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2 4 இலட்சம அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1,2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யபபட்டுள்ளது. ஒவவொரு விருந்தினர் விடுதியும ஒவவொனறும் 50 அறைத தொகுதிகள் கொணட மூன்று தளங்களைக் கொணடு விளஙகும் குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொணட அறைகளை ஒவ்வொரு அறைததொகுதியும கொணடு விளங்கும். 600 சதுர அடி கொணட இவை பொது தாழவாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும. ஒவவொரு அறைத்தொகுககான நன்கொடை ரூ 60,000/-ஆகும். மொததம 450 அறைத்தொகுதிகளில, 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன.

## பயனகள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுளள கருங்கற் பலகை வைககப்படும்.

2. நனகொடையாளாகள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசமபர் வரை) நன்கொடை அளிக்கப்பட்டுள்ள குடிலகளில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுககு மிகாமல, 60 நாட்களுககு இலவசமாகத் தஙகலாம.

3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளாகளின உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.

4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

